உ

குருபாதம்

வெளியீடு எண் : 27

# நீதிநெறி விளக்கம்
# முதுமொழிமேல்வைப்பு
# நீதிவெண்பா

வெளியீடு :

**தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையம்**

தியாகராய நகர், சென்னை - 600 017.

**2018**

வெளியீடு எண் : 27

உ

குருபாதம்

# நீதிநெறி விளக்கம்
# முதுமொழிமேல்வைப்பு
# நீதிவெண்பா

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம்

26ஆவது குருமகாசந்நிதானம்

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய**

**சுவாமிகள்**

திருவுளப்பாங்கின்வண்ணம்

வெளியிடப்பெற்றது

வெளியீடு :

தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையம்

தியாகராய நகர், சென்னை - 600 017.

2018

| | |
|---|---|
| முதற்பதிப்பு | : 2018 |
| பிரதிகள் | : 1500 |
| எழுத்து அளவு | : 12 மற்றும் 13 புள்ளிகள் |
| நூல் அளவு | : 125 mm x 175 mm |
| பக்கங்கள் | : 108 பக்கங்கள் |

அடக்க விலை ரூ. 30/-

அச்சிட்டோர் :

**அபிராமி அச்சகம்**

சென்னை - 26.

044 - 2472 2129, 99411 86832

உ

குருபாதம்

# பொருளடக்கம்



*****

தருமை ஆதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம்



ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த
பரமாசாரிய சுவாமிகள்

உ

குருபாதம்

# முகவுரை

*"நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்*
*நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்*
*எழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே*
*வழுத்தாத தெம்பிரான் மன்று.*

பதினெண்கீழ்கணக்கு நூல்கள் நீதிநூல்களாகும் இவற்றுள் தலைசிறந்து விளங்குவது திருக்குறள். இதனை உலகப் பொதுமறை என்பர். திருக்குறளைத் தந்த வள்ளுவரை, தமிழ்நாடு தந்தமையால் வான் புகழ்கொண்டு திகழ்கின்றது. "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ்நாடு" என்பார் பாரதியார்.

தருமையாதீன முனிபுங்கவரின் குமரகுருபர சுவாமிகள் திருக்குறளை சுருக்கி "நீதிநெறி விளக்கம்" எனும் நூலினை அருளினார்.

ஒருமுறை மதுரையில் நாயக்கர் அரண்மனைக்கு குமரகுருபரர் எழுந்தருளியபோது மன்னர் உடல் நலமின்றி உணவின்றி இருந்தார். அதுபோழ்து "வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடிதொகுத்தார்க்கு துய்த்தல் அரிது" என குமரகுருபரர் கூறவே மன்னர் இது எதில் உள்ளது என கேட்க திருக்குறள் என்க, எத்தனை பாடல்கள் உள்ளன என்று கேட்க 1330 குறள்கள் என்க, அவ்வளவும் நம்மால் படிக்கமுடியாது தாங்கள் குறளின் சாரமாக நாம் படிக்கும் அளவு யாத்து தரல் வேண்டுமென கேட்டுக்

கொண்டதற்கிணங்க "நீதிநெறி விளக்கம்" நூலை யாத்து அளித்தார். 101 பாடல்களில் வெண்பா யாப்பில் அமைந்துள்ளன.

வாழ்க்கையில் நீதிநெறி விளக்கத்தை ஒரு முறை படித்துவிட்டால் போதும், மனக்கவலையை மாற்றும், உள்ளத்தில் தெளிவுண்டாகும்.

கல்வியுடைமையில் தொடங்கி எட்டு பாடல்களில் குறித்துள்ளார். பதினைந்து பாடல்களில் அரசியல்பு கூறுகின்றார். கொடுங்கோல் அரசு, புகழுடம்பு கிடைத்தற்குரிய இலக்கணம், நிலையாமை, அரசன் சென்றவழியே குடிமக்கள் செல்வது, அரசனுக்கு மந்திரி குற்றத்தை சுட்டிக்காட்டல், ஊழ், மனம், வாக்கு, காயங்களின் தூய்மை, பொருள் ஈட்டும் வகை, ஈகையின் சிறப்பு, கற்புடைமை, பிறன்மனை நயத்தலின் தீமை, காமத்தின் தீமை, நன்மக்கட் பேற்றின் சிறப்பு, துறவறம், ஞானியர் செயல், தவவிரதம், உண்மைத் துறவு, வீடு பெற முயல்வார் இயல்பு என "அறம் பொருள் இன்பம் வீடு" எனும் நாற் பொருள் குறித்து அளித்துள்ளார்.

அடுத்து குமரகுருபரரிடம் வடமொழி, தென்மொழி கலைஞானம் கற்ற தருமையாதீன முனிபுங்கவர், கமலை ஸ்ரீ வெள்ளியம்பலவாண முனிவர் இயற்றியது "முதுமொழி மேல் வைப்பு" திருக்குறளுக்கு "முதுமொழி" எனும் பெயருண்டு இதனை குமரகுருபரர் "முதுசொற் புலவர் வடித்த பசுந்தமிழ் நூல் பாழ்போகாமே" என்று காட்டுகின்றார்.

ஸ்ரீ குமரகுருபரர் திருக்குறளை சுருக்கி நீதிநெறி விளக்கம் எனும் நூலினை அருளியது போன்று நீதிகளை விளக்கும் வரலாற்றை முன்னும் அதற்கியைந்த குறளைப் பின்னும் அமைத்து இயற்றிய சிறப்பமைந்த நூல் "முதுமொழி மேல் வைப்பு".

இது சம்பந்தமான செய்திகளும், கதைகளுமே குறட்பாக்களுக்கு விளக்கமாக அமைந்திருப்பது, இந்நூலின் தனிச் சிறப்பாகும்.

இந்நூலில் அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கு வகையாலும் குறட்பாக்களை எடுத்து அமைத்துள்ளார் முறையே 63-96-27-10 எனும் எண்ணிக்கையில் குறள்களைத் தேர்ந்து 196 குறளுக்கு நூல் செய்துள்ளார்.

அடுத்து நீதிவெண்பா எனும் நூல் ஆசிரியர் பெயர் தெரியவில்லை. கடவுள் வாழ்த்து உள்பட 101 பாடல்களைக் கொண்டது வெண்பாயாப்பினது.

தாயார் ஐவர், செல்வத்தின் சிறப்பு, வினைப்பயனை விடாதுகளிக்கும், ஞானிக்கு துன்பமில்லை, துஷ்டனுக் கின்பமில்லை, புண்ணியமே வாழ்வு நல்லோர் தீயோர் இயல்பு, அடியவர் பொருள் கவர்தல் கூடாது, இனிய சொல்லே இன்பம் பயக்கும், நீற்றின் பெருமை, மந்திரங்கள் ஐந்தெழுத்துக்கு ஒப்பாகா, சேர்ந்த இடத்தின் பயன் மகளின் வாக்குநிலை, ஒவ்வொரு யுகத்திலும் யார் கூற்றுவனாகிறார்கள், புல்லோர்க்கண் எல்லாம் நஞ்சே. யார்யாரிடம் எவ்வளவு தூரத்தே நிற்றல்தகும், நலமாக வாழ

ஒரு போழ்துண்ணல், ஒரு குடும்பத் தலைவியின் இலக்கணம், அடியவர் பெருமை என பல வகையாலும் சைவசமயக் கருத்துக்களை தாங்கி நிற்கின்றன.

இம்மூன்று நீதி நூல்களும் படித்து வாழ்வில் கடைபிடிப்பார்களேயானால் வாழ்வு சிறக்கும், உலகம் இயற்கை உபாதையிலிருந்து நலமுற்றிருக்கும், அரசன் செங்கோல் வழிநடப்பான்.

"நீதியில்லா மன்னர்... விழலென நீத்துவிடு" என்றும்

"நீதியால் வாழ மாட்டேன்" என்றும்,

"ஆர் அறிவார் நீதிவழி? ஆர் அறிவார் சித்திமுத்தி?
ஆர்அறிவார் நற்றவங்கள் அன்பனைத்தும்பார் எவர்க்கும்
கத்தன், கமலையில்வாழ் ஞானப்ர காசன் எனும்
அத்தன் என்போல் வந்திலனானால்" என்றும்

"நீதி பேணுவீர் ஆதி அன்னியூர்" என்றும் நீதியைப் பற்றியச் சிந்தனையை காட்டியுள்ளனர்.

நீதிநூல்களின் மிகச் சிறப்பான நிலையில் அமைந்துள்ளதும், அறம் பொருள் இன்பம் வீடு பற்றிய சிந்தனைக் கருத்துக்களையும், சமயம் சார்ந்து அமைந்துள்ளதும் ஆன 'நீதி நெறி விளக்கம், முதுமொழி மேல் வைப்பு, நீதிவெண்பா' எனும் மூன்று நூல்கள் தருமையாதீன அனைத்துலக சைவ சித்தாந்த ஐந்தாவது மாநாடு சென்னையில் மார்ச் 8,9,10,11-2018 நடைபெறுவதை முன்னிட்டு வெளியீடு செய்ய தருமையாதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம் திருவுளம் பற்றினார்கள்.

அவ்வண்ணம் நீதிநூல்கள் வெளியீடு செய்யப்பெறுகிறது. இந்நூல்கள் வெளியீடு செய்ய பொருளுதவி அளித்த Dr. **K. RAJU**, Physical Director, Chennai - 17. அவர்கட்கும் இதனை படித்து பயனுறும் அன்பர்கட்கும் ஸ்ரீ செந்தமிழ்ச்சொக்கநாதப் பெருமான் திருவருளையும் தருமையாதீன குருமணிகளின் குருவருளையும் சிந்திக்கின்றோம்.

ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானத்தின் உத்தரவுப்படி,
**ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த சுவாமிகள்**
இளைய சந்நிதானம் தருமை ஆதீனம்

12-02-2018

## ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளியது

# 1. நீதிநெறி விளக்கம்

### 1. கடவுள் வாழ்த்து

நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டு நெடுந்திரைகள் - நீரில்
எழுத்தாகும் யாக்கை; நமரங்காள்; என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று.

### 2. கல்வியின் பயன்

அறம்பொரு ளின்பமும் வீடும் பயக்கும் ;
புறங்கடை நல்லிசையு நாட்டும்; - உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்குங் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை.

### 3. கல்வி இன்பம்

தொடங்குங்கால் துன்பமா யின்பம் பயக்கும்
மடங்கொன் றறிவகற்றுங் கல்வி - நெடுங்காமம்
முற்பயக்குஞ் சின்னீர இன்பத்தின் முற்றிழாய்!
பிற்பயக்கும் பீழை பெரிது.

### 4. கல்விச் செல்வம்

கல்வியே கற்புடைப் பெண்டிர்அப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே ஈர்ங்கவியாச் - சொல்வளம்
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்தும்
செல்வமு முண்டு சிலர்க்கு.

## 5. சொல்வன்மையின் சிறப்பு

எத்துணைய வாயினுங் கல்வி இடமறிந்
துய்த்துணர் வில்லெனின் இல்லாகும் - உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை யின்றெனின் என்னாகும்? அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து.

## 6. இருந்தும் பயனில்லாதவை

அவையஞ்சி மெய்விதிர்ப்பார் கல்வியுங் கல்லார்
அவையஞ்சா ஆகுலச் சொல்லும் - நவையஞ்சி
ஈத்துண்ணார் செல்வமும் நல்கூர்ந்தார் இன்னலமும்
பூத்தலிற் பூவாமை நன்று.

## 7. புலவர் பெருமை

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான் - மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு.

## 8. அவையஞ்சு கல்வி

நெடும்பகற் கற்ற அவையத் துதவா
துடைந்துளார் உட்குவருங் கல்வி - கடும்பகல்
ஏதிலான் பாற்கண்ட இல்லினும் பொல்லாதே
தீதென்று நீப்பரி தால்.

## 9. கற்றவற்றை ஓம்புதல்

வருந்தித்தாங் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் தொடங்கல் - கருந்தனம்
கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல்.

## 10. வறிஞர் கல்வி நலன்

எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையுஞ் சீர்ப்பா டிலவாம் - மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்.

## 11. உலகம் செல்வரைச் சார்தல்

இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினுமொன் றில்லானேல்
வன்சொல்லி னல்லது வாய்திறவா; - என்சொலினும்
கைத்துடையான் காற்கீழ் ஒதுங்குங் கடன்ஞாலம்
பித்துடைய அல்ல பிற.

## 12. ஈயாச் செல்வரை உலகம் போற்றல்

இவறன்மை கண்டு முடையாரை யாரும்
குறையிரந்துங் குற்றேவல் செய்ப பெரிதுந்தாம்
முற்பக னோலாதார் நோற்றாரைப் பின்செல்லல்
கற்பன்றே கல்லாமை யன்று.

## 13. கல்வி அழகே அழகு

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம் - முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா, யாரே
அழகுக் கழகுசெய் வார்?

## 14. கல்விச் செருக்கு ஆகாது

முற்று முணர்ந்தவ ரில்லை; முழுவதூஉம்
கற்றன மென்று களியற்க - சிற்றுளியாற்
கல்லுந் தகருந் தகரா கனங்குழாய் !
கொல்லுலைக் கூடத்தி னால்.

## 15. மேன்மேலும் கல்வி கற்கும் அவா

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க; - தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக; கற்றதெல்லாம்
எற்றே யிவர்க்குநாம் என்று.

## 16. எல்லார்க்கும் நன்றாம் பணிதல்

கல்வி யுடைமை பொருளுடைமை யென்றிரண்டு
செல்வமுஞ் செல்வம் எனப்படும்; - இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின்.

## 17. பெரியோர் பணிவு

ஆக்கம் பெரியார் சிறியா ரிடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப - தூக்கின்
மெலியது மேன்மேல் எழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழுந் துலைக்கு.

## 18. தற்புகழ்ச்சியால் விளையும் கேடு

விலக்கிய ஓம்பி விதித்தனவே செய்யும்
நலத்தகையார் நல்வினையுந் தீதே - புலப்பகையை
வென்றன நல்லொழுக்கில் நின்றேம் பிறவென்று
தம்பாடு தம்மிற் கொளின்.

## 19. தற்புகழ்ச்சியின் இகழ்ச்சி

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால் - தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை அன்றே நலம்.

## 20. பிறர் நன்மதிப்புப் பெறும் வழி

பிறரால் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு - பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்.

## 21. கற்றபடி ஒழுகுதல்

கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை - சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல்.

## 22. நரகம் அடைபவர்

பிறர்க்குப் பயன்படத் தாங்கற்ற விற்பார்
தமக்குப் பயன்வே றுடையார் - திறப்படூஉம்
தீவினை யஞ்சா விறல்கொண்டு தென்புலத்தார்
கோவினை வேலை கொளல்.

## 23. கல்லாதார் அடக்கமின்மை

கற்பன ஊழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றூத்தைவாய் அங்காத்தல் - மற்றுத்தம்
வல்லுரு அஞ்சன்மின் என்பவே; மாபறவை
புல்லுரு அஞ்சுவ போல்.

## 24. அறிவுடையார்க்கே கல்வி நலன்

போக்கறு கல்வி புலமிக்கார் பாலன்றி
மீக்கொ ணகையினார் வாய்ச்சேரா - தாக்கணங்கும்
ஆணவாம் பெண்மை யுடைத்தெனினும் பெண்ணலம்
பேடு கொளப்படுவ தில்.

## 25. கற்றார் கல்லார் தன்மையை அறிதல்

கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறூஉம்
குற்றந் தமதே பிறிதன்று முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை உணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன் ?

## 26.அறிவுடையோர் மாட்சிமை

வேத்தவை காவார் மிகன்மக்கள் வேறுசிலர்
காத்தது கொண்டாங் குகப்பெய்தார் - மாத்தகைய
அந்தப் புரத்தது பூஞை புறங்கடைய
கந்துகொல் பூட்கைக் களிறு.

## 27. இன்னாருக்கு இன்னார் தெய்வம்

குலமகட்குத் தெய்வங் கொழுநனே; மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும் - அறவோர்க்
கடிகளே தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூ ணிறை.

## 28. ஆளுந் திறமை

கண்ணிற் சொலிச்செவியி னோக்கு மிறைமாட்சி
புண்ணியத்தின் பாலதே ஆயினும் - தண்ணளியால்
மன்பதை ஓம்பாதார்க் கென்னாம்? வயப்படைமற்
றென்பயக்கு மாணல் லவர்க்கு.

## 29. அளவறிந்து வரிகொள்ளும் முறை

குடிகொன் றிறைகொள்ளுங் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலும் மாண்பே - குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோற்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல.

## 30. கொடுங்கோல் அரசன் இயல்பு

இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறான்
நின்று குறையிரப்ப நேர்படான்; - சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பா னாறலைக்கும்
வேடலன் வேந்து மலன்.

## 31. அரசச் செல்வ மயக்கம்

முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப வுடுத்துண்ப உண்ணா - இடித்திடித்துக்
கட்டுரை கூறிற் செவிக்கொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம்.

## 32. செங்கோன்மைச் சிறப்பு

ஒற்றின் தெரியாச் சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோள் துணையாத் தெரிதந்தும் - குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினுங் கேளாமை யன்று.

## 33. அரசனின் பேரறிவு

ஏதிலார் யாதும் புகல இறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரும் உண்டு.

## 34. கீழ்மக்கள் கேடு அறியாமை

கண்கூடாப் பட்டது கேடெனினுங் கீழ்மக்கட்
குண்டோ வுணர்ச்சிமற் றில்லாகும் - மண்டெரி
தான்வாய் மடுப்பினு மாசுணங் கண்டுயில்வ
பேரா பெருமூச் செறிந்து.

## 35. கேட்டை அறிவிக்கும் செயல்கள்

நட்புப் பிரித்தல் பகைநட்டல் ஒற்றிகழ்தல்
பக்கத்தார் யாரையு மையுறுதல் - தக்கார்
நெடுமொழி கோறல் குணம்பிறி தாதல்
கெடுவது காட்டுங் குறி.

## 36. பெரியோரைப் பிழையாமை

பணியப் படுவார் புறங்கடைய ராகத்
தணிவில் களிப்பினாற் றாழ்வார்க் - கணிய
திளையாள் முயக்கெனினுஞ் சேய்த்தன்றே மூத்தாள்
புணர்முலைப் போகங் கொளல்.

## 37. ஈகையின் இலக்கணம்

கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா - வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையா ரன்றே?
சலியாத கற்ப தரு.

## 38. மேன்மக்களின் ஈகைக்குணம்

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா - ஆங்கதுகொண்
டூரு மெறும்பிங் கொருகோடி உய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று.

## 39. அரசனின் நன்மதிப்பு

மாகஞ் சிறுகக் குவித்து நிதிக்குவை
ஈகையின் ஏக்கழுத்த மிக்குடைய - மாகொல்
பகைமுகத்த வெள்வேலான் பார்வையின் தீட்டும்
நகைமுகத்த நன்கு மதிப்பு.

## 40. புகழுடம்பு பெறுதற்கு வழி

களைகாணாத் தம்மடைந்தார்க் குற்றுழியும் மற்றோர்
விளைவுன்னி வெற்றுடம்பு தாங்கார் - தளர்நடைய
தூனுடம் பென்று புகழுடம் போம்புதற்கே
தானுடம் பட்டார்கள் தாம்.

## 41. வலியும் மானமும் இழத்தல்

தம்முடை யாற்றலு மானமுந் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக - பின்னர்ச்
சிறுவரை யாயினு மன்ற தமக்காங்
கிறுவரை யில்லை யெனின்.

## 42. சாதற்கு அஞ்சாதவர்

கலனழிந்த கற்புடைப் பெண்டிரு மைந்து
புலனொருங்கப் பொய்கடிந் தாரும் - கொலைஞாட்பின்
மொய்ம்புடை வீரரு மஞ்சார்; முரண்மறலி
தும்பை முடிச்சூ டினும்.

## 43. மெய்ப்பயன் கொண்டார்

புழுநெளிந்து புண்ணழுகி யோசனை நாறும்
கழிமுடை நாற்றத்த வேனும் - விழலர்
விளிவுன்னி வெய்துயிர்ப்பர் மெய்ப்பயன் கொண்டார்
சுளியார் சுமைபோடு தற்கு.

## 44. அரசன் சென்றவழி குடிகளும் செல்வர்

இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
புகழினு மொக்கப் புகழ்ப - இகன்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்?
நீர்வழிப் பட்ட புணை.

## 45. அமைச்சரின் கடமை

செவிசுடச் சென்றாங் கிடித்தறிவு மூட்டி
வெகுளினும் வாய்வெரீஇப் பேரா; கவுண்மதத்த
கைம்மா வயத்ததோ பாகுமற் றெத்திறத்தும்
அம்மாண் பினவே யமைச்சு.

## 46. அரசனைச் சார்ந்தொழுகும் முறை

கைவரும் வேந்த னமக்கென்று காதலித்த
செவ்வி தெரியா துரையற்க; - ஒவ்வொருகால்
எண்மைய னேனு மரியன் பெரிதம்மா!
கண்ணில னுள்வெயர்ப்பி னான்.

## 47. மன்னனின் வெகுளி

பழமை கடைப்பிடியார்; கேண்மையும் பாரார்;
கிழமை பிறிதொன்றுங் கொள்ளார் - வெகுளின்மன்
காதன்மை யுண்டே இறைமாண்டார்க் கேதிலரும்
ஆர்வலரு மில்லை யவர்க்கு.

## 48. மன்னர் புறங்கடை காத்தல்

மன்னர் புறங்கடை காத்து வறிதேயாம்
எந்நலங் காண்டுமென் றெள்ளற்க - பன்னெடுநாட்
காத்தவை யெல்லாங் கடைமுறை போய்க் கைகொடுத்து
வேத்தவையின் மிக்குச் செயும்.

## 49. இறக்கும்வரை முயற்சியுடைமை

உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறு முயல்ப - இறுமுயிர்க்கும்
ஆயுண் மருந்தொழுக்க றீதன்றா லல்லனபோல்
ஆவனவு முண்டு சில.

## 50. முயற்சியின் சிறப்பு

முயலாது வைத்து முயற்றின்மை யாலே
உயலாகா வூழ்த்திறத்த வென்னார் - மயலாயும்
ஊற்ற மிறுவிளக்க ஊழுண்மை காண்டுமென்
றேற்றார் எறிகான் முகத்து.

## 51. முயற்சியால் ஊழையும் வெல்லல்

உலையா முயற்சி களைகணா வூழின்
வலிசிந்தும் வன்மையு முண்டே - உலகறியப்
பான்முளை தின்று மறலி யுயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி.

## 52. தெரிந்து முயற்சி செய்தல்

கால மறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூல மறிந்து விளைவறிந்து - மேலுந்தாம்
சூழ்வன் சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை யாளப் படும்.

## 53. கருமமே கண்ணாயினார்

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி
அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார்.

## 54. சிறுபகையைக் களைதல்

சிறிய பகையெனினு மோம்புத றேற்றார்
பெரிதும் பிழைபா டுடையர் - நிறைகயத்
தாழ்நீர் மடுவிற் றவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது.

## 55. உட்பகைக்கு அஞ்சுதல்

புறப்பகை கோடியின் மிக்குறினு மஞ்சார்
அகப்பகை யொன்றஞ்சிக் காப்ப வனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார் பரிந்தோம்பிக் காப்பவே
பல்காலுங் காமப் பகை.

## 56. உட்பகையினைக் களைதல்

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறாதல் வேண்டுங் - கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யார் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து.

## 57. வஞ்சக நட்பு

நட்பிடைக் குய்யம்வைத் தெய்யா வினைசூழ்ந்து
வட்கார் திறத்தராய் நின்றார்க்குத் - திட்பமா
நாளுலந்த தன்றே நடுவ ணடுவின்மை
வாளா கிடப்பன் மறந்து.

## 58. மனத்தின் தூய்மை

மனத்த கறுப்பெனி னல்ல செயினும்
அனைத்தெவையுந் தீயவே யாகும் - எனைத்துணையும்
தீயவே செய்யினு நல்லவாக் காண்பவே
மாசின் மனத்தி னவர்.

## 59. சொல்லுபவரது சொல்லின் இயல்பு

இனியவ ரென்சொலினு மின்சொல்லே யின்னார்
கனியு மொழியுங் கடுவே - அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினு நோய்தீர்க்கு மெய்பொடிப்பச்
சிங்கிக் குளிர்ந்துங் கொலும்.

## 60. நன்னெறி இன்னது என்பது

பொய்குறளை வன்சொல் பயனிலவென் றிந்நான்கும்
எய்தாமை சொல்லின் வழுக்காத்து - மெய்யிற்
புலமைந்துங் காத்து மனமா சகற்றும்
நலமன்றே நல்லா றெனல்.

## 61. நல்லோர் தம் இயல்பு

நல்லா றொழுக்கின் றலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார் - பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்துந் தின்னாவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ்.

## 62. ஓம்பிக் காக்கவேண்டியவை

குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும் வாய்மை
நலம்விற்றுக் கொள்ளுந் திருவுந் தவம்விற்றாங்
கூனோம்பும் வாழ்வு முரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்த றலை.

## 63. வஞ்சித்து ஈட்டும் பொருள்

இடைதெரிந் தச்சுறுத்து வஞ்சித் தெளியார்
உடைமைகொண் டேமாப்பார் செல்வம் - மடநல்லார்
பொம்மன் முலைபோற் பருத்திடினு மற்றவர்
நுண்ணிடைபோற் றேய்ந்து விடும்.

## 64. பேராசையின் குற்றம்

பெற்ற சிறுகப் பெறாத பெரிதுள்ளும்
சிற்றுயிர்க் காக்க மரிதம்மா - முற்றும்
வரவர வாய்மடுத்து வல்விராய் மாய
எரிதழன் மாயா திரா.

## 65. பொருளீட்டும் முறை

தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டிற் றாளூன்றி -எய்த்தும்
அறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள்.

## 66. செல்வத்தின் வகை

பொதுமகளே போல்வ தலையாயார் செல்வம்
குலமகளே யேனையோர் செல்வம் - கலனழிந்த
கைம்மையார் பெண்மை நலம்போற் கடையாயார்
செல்வம் பயன்படுவ தில்.

## 67. ஈயாத செல்வரின் இழிவு

வள்ளன்மை யில்லா தான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான்.

## 68. ஈகையின் இன்சொல் சிறப்பு

ஈகை அரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
ஓஒ கொடிது கொடிதம்மா - நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்ப்பூட் டிடப்படின்மற்
றாவா விவரென்செய் வார்.

## 69. சொல்வன்மைப் பயன்

சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல - வல்லைத்தம்
ஆக்கங் கெடுவ துளதெனினு மஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர்.

## 70. சிறுமுயற்சிப் பெரும்பயன்

சிறுமுயற்சி செய்தாங் குறுபயன் கொள்ளப்
பெறுமெனிற் றாழ்வரோ தாழார் - அறனல்ல
எண்மைய வாயினுங் கைவிட் டரிதெனினும்
ஒண்மையிற் றீர்ந்தொழுக லார்.

## 71. நாகரிகம் இல்லாதவர் செயல்

செயக்கடவ வல்லனவுஞ் செய்துமன் னென்பார்
நயத்தகு நாகரிக மென்னாம் - செயிர்த்துரைப்பின்
நெஞ்சுநோ மென்று தலைதுமிப்பான் றண்ணளிபோல்
எஞ்சா தெடுத்துரைக்கற் பாற்று.

## 72. புல்லியரின் ஆரவாரச் செயல்

அல்லன செய்யினு மாகுலங் கூழாக்கொண்
டொல்லாதார் வாய்விட் டுலம்புப - வல்லார்
பிறர்பிறர் செய்பபோற் செய்தக்க செய்தாங்
கறிமடம் பூண்டுநிற் பார்.

## 73. பிறர்பழி கூறுவோரின் இழிவு

பகையின்று பல்லார் பழியெடுத் தோதி
நகையொன்றே நன்பயனாக் கொள்வான் பயமின்று
மெய்விதிர்ப்புக் காண்பான் கொடிறுடைத்துக்
கொல்வான்போற்
கைவிதிர்த் தஞ்சப் படும்.

## 74. தெய்வ தண்டனை

தெய்வ முளதென்பார் தீய செயப்புகிற்
றெய்வமே கண்ணின்று நின்றொறுக்கும் - தெய்வம்
இலதென்பார்க் கில்லைத்த மின்புதல்வர்க் கன்றே
பலகாலுஞ் சொல்வார் பயன்.

## 75. தீயவர் ஆக்கம்

தீய செயற்செய்வா ராக்கம் பெருகினும்
தீயன தீயனவே வேறல்ல - தீயன
நல்லன வாகாவா நாவின் புறநக்கிக்
கொல்லுங் கவயமாப் போல்.

## 76. பழி நாணுவோர்

நன்மக்கள் செந்நாத் தழும்பிருக்க நாள்வாயும்
செந்நெறிச் செல்வாரிற் கீழல்லர் - முன்னைத்தம்
ஊழ்வலி யுன்னிப் பழிநாணி யுள்ளுடைவார்
தீய செயினுஞ் சில.

## 77. பிறர்மனை விரும்புதலின் தீமை

பிறன்வரை நின்றாள் கடைத்தலைச் சேறல்
அறனன்றே யாயினு மாக - சிறுவரையும்
நன்னலத்த தாயினுங் கொள்க நலமன்றே
மெய்ந்நடுங்க வுண்ணடுங்கு நோய்.

## 78. நன்னல இன்பம்

கருமஞ் சிதையாமே கல்வி கெடாமே
தருமமுந் தாழ்வு படாமே - பெரிதுந்தம்
இன்னலமுங் குன்றாமே யேரிளங் கொம்பன்னார்
நன்னலந் துய்த்த னலம்.

## 79. காமத்தின் தீமை

கொலையஞ்சார் பொய்ந்நாணார் மானமு மோம்பார்
களவொன்றோ வேனையவுஞ் செய்வார் - பழியோடு
பாவமிஃதென்னார் பிறிதுமற் றென்செய்யார்
காமங் கதுவப்பட் டார்.

## 80. காமுகர் இயல்பு

திருவினு நல்லாண் மனைக்கிழத்தி யேனும்
பிறன்மனைக்கே பீடழிந்து நிற்பர் - நறுவிய
வாயின வேனு முமிழ்ந்து கடுத்தின்னும்
தீய விலங்கிற் சிலர்.

## 81. நன்மக்கட் பேற்றின் சிறப்பு

கற்புடுத் தன்பு முடித்துநாண் மெய்ப்பூசி
நற்குண நற்செய்கை பூண்டாட்கு - மக்கட்பே
றென்பதோ ராக்கமு முண்டாயி னில்லன்றே
கொண்டாற்குச் செய்தவம் வேறு.

## 82. கற்பில் மகளிர் மனம்

ஏந்தெழின் மிக்கா னிளையா னிசைவல்லான்
காந்தையர் கண்கவர் நோக்கத்தான் - வாய்ந்த
நயனுடை யின்சொல்லான் கேளெனினு மாதர்க்
கயலார்மே லாகு மனம்.

## 83. கற்பிலாக் குலமகளிரது இழிவு

கற்பின் மகளி னலம்விற் றுணவுகொளும்
பொற்றொடி நல்லார் நனிநல்லர் - மற்றுத்தம்
கேள்வற்கு மேதிலர்க்குந் தங்கட்குந் தங்கிளைஞர்
யாவர்க்குங் கேடுசூ ழார்.

## 84. கற்பிலா மகளிர் பிறப்பு

முறையுங் குடிமையும் பான்மையு நோக்கார்
நிறையு நெடுநாணும் பேணார் - பிறிதுமொரு
பெற்றிமை பேதைமைக் குண்டே பெரும்பாவம்
கற்பின் மகளிர் பிறப்பு.

## 85. துறவறம் மேற்கொண்டவர் இயல்பு

பெண்மை வியவார் பெயரு மெடுத்தோதார்
கண்ணோடு நெஞ்சுறைப்ப நோக்குறார் - பண்ணோடு
பாடல் செவிமடார் பண்பல்ல பாராட்டார்
வீடில் புலப்பகையி னார்.

## 86. துறவிகள் தம் உண்டி சுருக்கல்

துயிற்சுவையுந் தூநல்லார் தோட்சுவையு மெல்லாம்
அயிற்சுவையி னாகுவவென் றெண்ணி - அயிற்சுவையும்
பித்துணாக் கொள்பபோற் கொள்ப பிறர்சிலர்போல்
மொத்துணா மொய்ம்பி னவர்.

## 87. துறவிகள் தம் உடலோம்பாமை

அன்பொ டருளுடைய ரேனு முயிர்நிலைமற்
றென்பியக்கங் கண்டும் புறந்தரார் - புன்புலாற்
பொய்க்குடி லோம்புவரோ போதத்தாற் றாம்வேய்ந்த
புக்கில் குடிபுகுது வார்.

## 88. ஞானியர் சிற்றின்பத்தை விழையார்

சிற்றின்பஞ் சின்னீர தாயினு மஃதுற்றார்
மற்றின்பம் யாவையுங் கைவிடுப - முற்றுந்தாம்
பேரின்ப மாக்கட லாடுவார் வீழ்பவோ
பாரின்பப் பாழ்ங்கும்பி யில்.

## 89. தவசிகள் மகளிர் இன்பம் விழையார்

எவ்வினைய ரேனு மிணைவிழைச் சொன்றிலரேற்
றெவ்வுந் திசைநோக்கிக் கைதொழூஉம் - அவ்வினை
காத்த லிலரே லெனைத்துணைய ராயினும்
தூர்த்தருந் தூர்ப்பா ரலர்.

## 90. துறவிகள் பேதையர் செயல்

பரபரப்பி னோடே பலபல செய்தாங்
கிரவுபகல் பாழுக் கிறைப்ப - ஒருவாற்றான்
நல்லாற்றி னூக்கிற் பதறிக் குலைகுலைப
எவ்வாற்றா னுய்வா ரிவர்.

## 91. காலம் நோக்காமல் தவஞ்செய்தல்

இளய முதுதவ மாற்றுது நோற்றென்
றுளைவின்று கண்பாடு மூழே - விளிவின்று
வாழ்நாள் வரம்புடைமை காண்பரேற் காண்பாரும்
தாழாமே நோற்பார் தவம்.

## 92. தவமுடையார்க்கே நற்செயல் கைகூடும்

நல்லவை செய்யத் தொடங்கினு நோனாமே
அல்லன வல்லவற்றிற் கொண்டுய்க்கும் - எல்லி
வியனெறிச் செல்வாரை யாறலைத் துண்பார்
செலவு பிழைத்துய்ப்ப போல்.

## 93. பொய்த்தவ வேடம் பயனில்லை

நெஞ்சு புறம்பாத் துறந்தார் தவப்போர்வை
கஞ்சுக மன்று பிறிதொன்றே - கஞ்சுகம்
எப்புலமுங் காவாமே மெய்ப்புலங் காக்குமற்
றிப்புலமுங் காவா திது.

## 94. தவவேடத்தால் வஞ்சித்தொழுகல்

வஞ்சித் தொழுகு மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தே மென்று மகிழன்மின் - வஞ்சித்த
எங்கு முளனொருவன் காணுங்கொ லென்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு.

## 95. பழிச்சொல் விரைவில் வெளிப்படுதல்

மறைவழிப் பட்ட பழமொழி தெய்வம்
பறையறைந்தாங் கோடிப் பரக்குங் கழிமுடைப்
புன்புலா னாற்றம் புறம்பொதிந்து மூடினும்
சென்றுதைக்குஞ் சேயார் முகத்து.

## 96. மேலோர் செயல்தவறின் உய்யார்

மெலியார் விழினு மொருவாற்றா னுய்ப
வலியார்மற் றொன்றானு முய்யார் - நிலைதப்பி
நொய்ய சழக்கென வீழாவாம் வீழினும்
உய்யுமா லுய்யா பிற.

## 97. மேலோர் வரம்பு கடவாமை

இசையாத போலினு மேலையோர் செய்கை
வசையாகா மற்றையோர்க் கல்லாற் - பசுவேட்டுத்
தீயோம்பி வான்வழக்கங் காண்பாரை யொப்பவே
ஊனோம்பி யூன்றின் பவர்.

## 98. ஞானாசிரியர் இயல்பு

எவரெவ ரெத்திறத்த ரத்திறத்த ராய்நின்
றவரவர்க் காவன கூறி - எவரெவர்க்கும்
உப்பாலாய் நிற்பமற் றெம்முடையார் தம்முடையான்
எப்பாலு நிற்ப தென.

## 99. மெய்யுணர்ந்தோர் தன்மை

மெய்யுணர்ந்தார் பொய்ம்மேற் புலம்போக்கார் மெய்யுணர்ச்சி
கைவருதல் கண்ணாப் புலங்காப்பார் - மெய்யுணர்ந்தார்
காப்பே நிலையாப் பழிநாண னீள்கதவாச்
சேப்பார் நிறைத்தாழ் செறித்து.

## 100. மெய்யுணர்வின் இன்பச் சிறப்பு

கற்றுத் துறைபோய காதலற்குக் கற்பினாள்
பெற்றுக் கொடுத்த தலைமகன்போல் - முற்றத்
துறந்தார்க்கு மெய்யுணர்விற் றோன்றுவதே யின்பம்
இறந்தவெலாந் துன்பமலா தில்.

## 101. வீடுபெற முயல்வார் தன்மை

கற்றாங் கறிந்தடங்கித் தீதொரீஇ நன்றாற்றிப்
பெற்றது கொண்டு மனந்திருந்திப் - பற்றுவதே
பற்றுவதே பற்றிப் பணியறநின் றொன்றுணர்ந்து
நிற்பாரே நீணெறிச்சென் றார்.

## 102. யோகியர் காட்சியும் முடிபொருளும்

ஐயந் திரிபின் றளந்துத் தியிற்றெளிந்து
மெய்யுணர்ச்சிக் கண்விழிப்பத் தூங்குவார் தம்முளே
காண்பதே காட்சி கனவு நனவாகப்
பூண்பதே தீர்ந்த பொருள்.

*****

சிவமயம்

# 2. முதுமொழிமேல் வைப்பு

## சிறப்புப் பாயிரம்

பதிகதையால் நாலொழிவெண் பாட்டிருநூறாக
முதுமொழிமேல் வைப்பு மொழிந்தான் - மதுமலர்க்கா
உம்ப ருலகளவு மோங்கு கமலைவெள்ளி
அம்பல வாணமுனி ்பன்.

## காப்பு

சதுமுகன்மால் காணாத ்தலைவர்புகழ் சொல்லும்
முதுமொழிமேல் வைப்பு மொழிய - மதுரத்
தவளமத வாரணமே தாயெனநின் றேத்தும்
கவளமத வாரணமே காப்பு.

## 1. அறத்துப்பால்

### பாயிரம்

### கடவுள் வாழ்த்து

எங்கு முளனிறைவ னென்றிரண்டா யேத் துதமிழ்ச்
சிங்க நடந்தவழிச் சித்தாந்தம் - என்றது
அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு. 1

புத்தர்பிறர் சொல்லும் பொருண்மறுத்து வள்ளுவர்தாம்
அத்தர்மறை யாகமங்க ளாமென்று - வைத்த
இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு. 2

வைதிகமேற் கொண்டுசொலு மற்றவர்க்குப் பக்குவர்க்காம்
சைவமவர் கொண் சமயமெனும் - செய்திசொலும்
கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
தாளை வணங்காத் தலை. 3

பெற்றதவர் சைவத்துப் பேத சமாதியன்றி
மற்றுஞா னாந்தமென வந்ததிது - முற்றும்
தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்ற லரிது. 4

அப்பர்முதற் சித்தாந் திகள்வீ டடைதலுமே
வைத்தபுவ னத்திருந்தார் மற்றையவர் - ஒக்கும்
பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தார்
இறைவனடி சேரா தார். 5

## வான்சிறப்பு

அழித்துலகை யாக்குதா லந்தமே யாதி
அழித்தொன்றை யாக்குவது முண்டோ வெனிற்கொள்
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை. 6

அடியவரை நீத்தரனுக் கன்புசெய்ய மாறன்
மழைமறுத்துப் பல்லுயிரும் வாடும் - படியில்
விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது. 7

## நீத்தார் பெருமை

ஆர்பெரியர் நீத்து மரனறிய நின்றதிரு
நீலகண்டர் போலரிதி னீத்திலரால் - சாலச்
செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார். 8

புறமகமென் றியாவும் புகல்வனவும் காணாத்
திறநுவல் கின்ற சிவநூல் - நெறியிற்
சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு. 9

## அறன் வலியுறுத்தல்

தண்டிக் கருள்புரிந்து தக்கன் சிரமறுக்கும்
அண்டர்பெரு மானருளு மாகமத்திற் - கண்ட
அறத்தினூஉம் காக்கமு மில்லை யதனை
மறத்தலி னூங்கில்லை கேடு. 10

காணலா மீசன் கழல்பணிந்து நல்லறங்கள்
பேணுவார் நாளும் பெறும்பயனைப் - பேணும்
அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை. 11

தருமர் பிறர்நெறியாற் சார்ந்ததுவிண் ணீசன்
அருணெறியா லீனருமே லானார் - அருநூல்
அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழு மில. 12

# இல்லறவியல்

## இல்வாழ்க்கை

இல்வாழ் மருத்தர்போ லீசனடிக் கன்புசெய
வல்லாரே னோற்க வருவானேன் - எல்லாரும்
ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து. 13

## வாழ்க்கைத் துணை நலம்

முளையா லமுதமைத்த முக்கணர்பா லன்பன்
இளையான் குடிமாற னில்வாழ்துணைபோல்
மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை. 14

உலகுண் டுறங்கு மொருத்தி யொருத்தி
சிலகொண்ட ரனுவப்பச் செய்யு மறனென்றால்
இல்லெத னில்லவண் மாண்பானா லுள்ளதென்
இல்லவண் மாணாக் கடை. 15

அறவோ னகத்திருந்தா ளன்புகண்டேங் கண்டேம்
இறையோ டிறந்தா ளியல்புமுறையுட்
சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை. 16

## புதல்வரைப் பெறுதல்

வேணுபுர நாதரருண் மேவுதலுஞ் சம்பந்தர்
தாதையினு மேனோருந் தாமகிழக் காணுதலால்
தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது. 17

பெண்பெறினு மென்ன பிழையோ தடாதகைபோல்
எண்பொருளு மீசனும்வந் தெய்துமே - கொண்ட
எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின். 18

## அன்புடைமை

கண்ணுதலோன் கண்ணோவு கண்டளவிற் கண்ணப்பன்
கண்ணினீர் சோரக் கதறுமால் - உண்ணெகிழும்
அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும். 19

## விருந்தோம்பல்

ஈசனடி யார்விருந்தென் றிட்டுலவாக் கோட்டைபெற்ற
நேசர் குறைவின்றி நிற்றலா னாடி
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. 20

## இனியவை கூறல்

முதுகிரியா னன்பர் முனிந்தருள் வந்த
தகுதி யுடையான் சரிதஞ் சொலுமே
பணிவுடைய னின்சொல னாத லொருவற்கு
அணியல்ல மற்றுப் பிற. 21

## செய்ந்நன்றி யறிதல்

எள்ளளவு காணா தெலிசெய்த நன்றிக்கா
வள்ள லுலகாள வைத்தருளும் - நல்லாய்
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். 22

அன்று குணனுய்ந்தா னந்தணனைக் கொன்றுமரன்
நன்றி கொலுமசுரர் நாடறியப் - பொன்றுதலால்
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு. 23

## நடுவு நிலைமை

ஈச னுமையா ளிடைப்பட்டு வாரமாய்ப்
பேசலு மாயோன் பெரும்பாம்பாம் - ஆசிற்
கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
நடுவொரீஇ யல்ல செயின். 24.

பிள்ளையினுங் கைத்தொண்டு பேணுதலா லப்பருக்கு
நல்ல படிக்காசு நல்குமால் - எல்லாம்
சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி. 25

## அடக்கமுடைமை

ஆனை யிழிந்து மரசிறைஞ்சும் போலியைக்கண்டு
ஏனையர னன்பரனென்றா லென்படுமோ - மாநிலத்துள்
எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளும்
செல்வர்க்கே செல்வந் தகைத்து. 26

சோதி திறமறிந்து சொல்லவறி யாதுசொல்லி
வேதநிலை கண்டானு மெய்ம்மறந்தான் - ஆதலால்
யாகாவா ராயினும் நாகாக்க காவாக்கால்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. 27

## ஒழுக்கமுடைமை

தில்லை மறையோர் சிவசமயஞ் சார்ந்தொழுகி
இம்மையே சாரூப மெய்தினார் நல்ல
ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்கம்
உயிரினு மோம்பப் படும். 28

## பிறனில் விழையாமை

எந்தை பலிக்கென்றியங்குநாட் பின்றொடர்ந்த
மென்றொடியார் தேத்தும் விழைந்திலார் - என்ப
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ வான்ற வொழுக்கு. 29

## பொறையுடைமை

பித்த னெனத்தமக்குப் பேர்படைத்து மெந்தைபிரான்
வைத்தவனைத் தோழனென வாழ்வித்தார் - நித்தம்
அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை. 30

கல்லெறியையும் பொறுத்துக் கண்ணுதலார் தாமறந்து
நல்ல பதமவர்க்கு நல்கினார் - வல்லி
பொறுத்த லிறப்பினை யென்று மதனை
மறத்த லதனினு நன்று. 31

## அழுக்காறாமை

புத்த னிறந்தான் பொறாமைசெய்து செய்யார்க்கு
நித்தரரு ளுண்டாய் நிறைந்த புகழ் - மெத்த
அழுக்கற் றகன்றாரு மில்லையஃதில்லார்
ஒழுக்கத்திற் றீர்ந்தாரு மில். 32

## வெஃகாமை

இரந்துண்டு வாழ்ந்த மிறைவர் புலவர்
இரந்த பொருள்கவர்ந்த தீந்தார் மறந்தும்
இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
புன்மையில் காட்சி யவர். 33

## புறங்கூறாமை

சங்கறுக்குஞ் சாதிசொலுஞ் சங்கரனை நக்கீரன்
அன்றுபழி சொன்னதுபோ லார்சொல்வார் - என்றும்
பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும்
திறன்றெரிந்து கூறப் படும். 34

## பயனில சொல்லாமை

இறைவர் மதலை யெதிரிசைவு கூறும்
வெறுமுரையாற் சென்றுகழு வேறும் - பிறர்போல்
பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும். 35

## தீவினை யச்சம்

தையலார் கற்பழியச் சார்வானை மாமதுரைத்
தெய்வமே சென்றொறுக்குஞ் செய்தியால் - நொய்தின்
மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழந் சூழ்ந்தவன் கேடு. 36

## ஒப்புரவறிதல்

தருவும் வரிசைபெறுஞ் சங்கரனுக்குக் கன்பர்
ஒருவர் திருவுடைய ராகத் - தெருநடுவே
ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
பேரறி வாளன் றிரு. 37

### ஈகை

தொல்லைமணி மன்றுடையார் தொண்டர்க்குப் பெண்டிரையும்
இல்லையெனா தீந்தா ரியற்பகையார் - வல்லி
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள. 38

### புகழ்

தோன்றி யரனருளாற் றொண்டர்வென்றார் தோற்றமணர்
ஏன்பிறந்தே மென்றே யிடருழன்றார் - ஆய்ந்தறிஞர்
தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. 39

## துறவற வியல்

### அருளுடைமை

அருளாற் பிரம்பி னடியுண்டார்க் கில்லை
துயர்தா னுலகனைத்துஞ் சொல்லும் - ஒருநாளும்
அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கும்
மல்லன்மா ஞாலங் கரி. 40

### புலான் மறுத்தல்

புத்தனா னன்றுசிவ போதனெனுஞ் சைவனென
வைத்ததிரு வள்ளுவர் வாய்மொழிதான் - நித்தம்
தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
விலைப்பொருட்டா லூன்றருவா ரில். 41

நாரைபுலா லுண்ணாது நல்லறமேற் கொண்டொழுகி
ஈசனுல கேறி யிருத்தலால் - .................
செயிரிற் றலைப்பிரிந்த காட்சியா ருண்ணார்
உயிரிற் றலைப்பிரிந்த வூன். 42

வேதியர்கள் விண்ணடைந்தார் வேட்டுயிரைக் கொன்று தின்னா
ஆதிசைவர் மேலென் றதனைமறுத் - தோதும்
அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று. 43

## தவம்

தமிழ்மணக்கப் பாடியரன் றண்ணளிசேர் மைந்தன்
அமணழிக்குந் தென்னவனை யாக்கும் - இமையளவில்
ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலும்
எண்ணிற் றவத்தால் வரும். 44

## கூடா வொழுக்கம்

என்று மிறைவ னடியார் பொருளென்று
நின்றொழுகு மெய்ப்பொருளி னேரான்போய் - அன்று
தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று. 45

## கள்ளாமை

ஈசனுக்கும் பெண்டென் றிருந்தாரு நெய்திருடி
ஆயர்மனைப் பட்டபா டார்படுவார் - சீசியென்று
எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றும்
கள்ளாமை காக்கதன் னெஞ்சு. 46

## வாய்மை

ஆதிமுடி தேடி யறியா னறிந்தேனென்று
ஓதிமன நொந்தே யுழல்கின்றான் - வேதனென்றால்
தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும். 47

நந்தியருள் காசிமயா னத்திருந்து சீவித்தும்
அந்த மொழிதவறா தாற்றுமரிச் - சந்திரன்போல்
உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தார்
உள்ளத்து ளெல்லா முளன். 48

## வெகுளாமை

பெற்ற முவந்தார் பெருமைமதி யாதுதக்கன்
செற்றமேற் கொண்டு சிரமிழந்தான் - முற்றும்
சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
நிலத்தறைந்தான் கைபிழையா தற்று. 49

## இன்னா செய்யாமை

கண்ணுதலார் தம்மைக் கடைகாக்க வைத்தானை
விண்ணவருந் தாழ்ந்திறைஞ்ச மேல் வைத்தார் - எண்ணி
இன்னாசெய் தாரையொறுத்த லவர்நாண
நன்னயஞ் செய்து விடல். 50

இரணியனைக் கொன்றிருக்க வெண்ணினவர் கேடு
அரன்வெகுளப் பின்னிகழு மாற்றால் - ஒருவர்
பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
பிற்பகல் தாமே வரும். 51

## கொல்லாமை

கூடலிறை யன்று கொடியமறை யோன்சுமத்தும்
வேடன்பழி யஞ்சி விடுவிக்கும் - தேடவரும்
நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றும்
கொல்லாமை சூழு நெறி. 52

## நிலையாமை

அரனையருச் சித்தவிப சித்திற்கும் வேள்வி
புரியு நகுடனுக்கும் போல - வருவதூஉம்
கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று. 53

முனைநா ளிருந்தகண்ணன் முக்கணற்காட் பட்ட
வனசரனான் மாயு மறுநாள் - எனலால்
நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு. 54

## துறவு

குலனொழுக்க நல்ல குணமுண்டோ வென்னும்
அரனருளு முய்யவந்தார்க் கன்றே துறவுமுதிர்ந்து
யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்கு
உயர்ந்த வுலகம் புகும். 55

பட்டினத்துப் பிள்ளை பரனையடைந் தார்துறந்து
விட்டுவிடாவிந்திர.... கிலார் - கிட்டித்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர். 56

எங்குமிறை தோய்ந்தாலுந் தோய்விலனென் றோதுதமிழ்ச்
சிங்க நடத்தவழிச் சித்தாந்தம் - அங்கதுகேள்
பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு. 57

## மெய்யுணர்தல்

மதியிருளை நீங்கின் மலவிருளு நீங்கும்
பதியருளா மென்றுசைவர் பார்த்து - மொழிவது
இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 58

இருள்பலவாக் கோட லிறைநூலுக் கன்றி
அருகர் பிறர்க்காகா தென்னும் - உரைகேள்
இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
மாசறு காட்சி யவர்க்கு. 59

அரனருளா மின்ப மனுபவிப்பார் வேறென்று
இருமைபரிந் தொன்றை யிகழ்வான் - உரைசெயும்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி. 60

பற்றொழிந்து மென்னபிறர் பண்டரனைத் தூதுவிடக்
கற்றவர்போன் மெய்ப்பொருளைக் கண்டார்கொல் -
உற்றதுகேள்
ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர் வில்லா தவர்க்கு 61

### அவாவறுத்தல்

பிறவியறார் மற்றையவர் பிஞ்ஞுகர்காண் பித்த
பலபொருளும் வேண்டாத பண்பினவரன்றி
அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையார்
அற்றாக வற்ற திலர். 62

### ஊழ்

வரருசியுள் ளிட்டார் மயங்கினா ரென்றால்
அவரவருக் கீச னமைத்த திறனன்றி
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும். 63

## 2. பொருட்பால்

### அரசியல்

### இறைமாட்சி

இறையெளிநின் றியார்க்கு மினியசொல்ல லாலே
மதுரை மதுரையென்பார் மாந்தர் - அதுவன்றோ
காட்சிக் கௌியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம். 64

### கல்வி

அருகர்கழு வேறுதலா லன்னெறிவிட் டீசர்
திருவருளால் வாதவூர் சேரும் - குருநெறியிற்
கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக 65

நாதரருள் சேரனோடு நம்பியா ரூரருமுன்
பேதமறக் கூடிப் பிரிவதுபோல் - தீதின்று
உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரிதல்
அனைத்தே புலவர் தொழில். 66

கற்றவர்சங் கத்திருந்தார் கண்ணுதலோ டேனையவர்
சற்றுமிரா ரென்று தலையாயார் - முற்றம்
உடையார்முன் னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லாத தவர். 67

சிவகீதை முற்கேட்டார் சென்றுசென்று சென்மித்து
அவர்பார்த் தனக்கருளு மாற்றால் - புவனத்து
ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்கு
எழுமையு மேமாப் புடைத்து. 68

இறைவருங் கைவிடா ரேடவூர்பாற் சென்ற
பிறருமறிந் தின்பம் பெறலால் - அறிதொறூஉம்
தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார். 69

## கல்லாமை

ஒருவர் சிறிது ........ னுமையாற்கு
அருள்வதன்முன்ப.. தறிந்து - குருமுகத்தாற்
கல்லாதா னொட்பங் கழியநன் றாயினும்
கொள்ளா ரறிவுடை யார். 70

ஈச ரிடத்தன்ப ரென்பவர்பாற் புத்தரெலாம்
பேசு மிடத்தூமையாம் பெற்றிமையால் ஆகமத்தைக்
கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும். 71

## கேள்வி

ஆலடியார் பாற்பட்ட வந்தணர்போ லூய்வதற்குச்
சீலமுடை யார்பாற் செவிதாழ்க்க - சால
இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார்வாய்ச் சொல். 72

## அறிவுடைமை

பிறர்க்குண்டோ வில்லையவர் பேராண்மை குன்ற
மதிக்க ணுழைமதனை மாய்த்தார் தமக்கே
அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா வரண். 73

ஈசனெறி தொண்டரியம்புதலு மெய்ந்நெறியென்(று)
ஆசின்று தேவ ரடைந்ததூஉம் நீதியன்றோ
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 74

பண்டு களிற்றுப் படிமருங்கு வைத்தசெழுந்
தண்டமிழை யம்பலவர் தாமகிழ்ந்து - கொண்டமையால்
எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு. 75

## குற்றங் கடிதல்

தோன்றி யிறையருளுந் தொண்டரெனு மூர்த்திக்கு
மூன்றுமறைச் செல்வ முதிருமஞ் - ஞான்று
செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து. 76

## பெரியாரைத் துணைக்கோடல்

பகைசிறிது மின்றிப் பறவைகளு மஞ்ச
இறைவர்துணைவலியா னெய்தும் - முறைமையால்
உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல். 77

சிந்தா மணிகிடைத்தென் தென்னற் கிறையருளால்
வந்தாரைப் போலவெது வாழ்விக்கும் - அந்தோ
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல். 78

## சிற்றினஞ் சேராமை

குண்டராற் றென்னன் குறைப்பட்டுக் கண்ணுதலர்
தொண்டரான் மிக்குயர்ந்து தோன்றலால் - எண்டிசையும்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தின்
அல்லற் படுப்பதூஉ மில். 79

## தெரிந்து செயல்வகை

ஆய்தொடியார் கண்ணுதல்பா லன்பி னுமிழ்தலுமே
வாய்மையறி யாதொழுகு மற்றவர்போல் - தூய்மையொடு
நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை. 80

## வலியறிதல்

கண்ணுதல்பாற் சென்றது காமனுக்கு வென்றியோ
எண்ணமிலான் போலு மெதிர்ந்திறந்தான் - நண்ணி
நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கின்
உயிர்கிறுதி யாகி விடும். 81

## காலமறிதல்

எல்லா மிமைப்பி லழிப்பாரு நீட்டித்தார்
வல்லார் புரமெரிக்க வந்துழியும் - ஒல்லாரைப்
பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்து
உள்வேர்ப்பர் ஒள்ளி யவர். 82

## இடனறிதல்

இறையருள் தென்னனிடத் திந்திரன்வந் தன்று
வளையா லெறிபட்ட வாற்றால் - இளையாச்
சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையான்
ஊக்க மழிந்து விடும். 83

## தெரிந்து தெளிதல்

இறைவர்நிலை காணா ரிருவரென்று கண்டால்
பெருமை சிறுமையினிப் பேசும் இறையாம்
பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம்
கருமமே கட்டளைக்கல். 84

## தெரிந்து வினையாடல்

ஈசன்குண் டோதரபோ வென்றருளுங் குன்றுபுரை
சோறுகறி யுண்டு தொலைப்பதற்கு நாடி
இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்து
அதனை யவன்கண் விடல். 85

## சுற்றம் தழால்

அத்தர் திருவருளா லன்றுபடிக் காசுபெற்றார்
பத்தர்கணஞ் சூழப் பரிந்திட்டார் - இத்தலத்துச்
சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன். 86

## பொச்சாவாமை

மறந்துமறந் தீசன் மலரடியைப் பேணா
பிறந்துபிறந்து மாலுமிட ரெய்தும் - அறிந்தறிந்து
முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும். 87

## செங்கோன்மை

இறைமகிழ வேந்த னிளங்கன்றிற் காக
மகவினையுந் தேரூரு மாற்றால் - அகலிடத்தில்
ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந்தி யார்மாட்டும்
தேர்ந்துசெய் வஃதே முறை. 88

அந்திவண்ண னூலா லருகர்பிறர் கோள்சிதைய
வந்ததிரு வள்ளுவர்தம் வாய்மொழிகேள் - இந்தநிலத்து
அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல். 89

## கொடுங்கோன்மை

மாமனென்றும் பாணனென்றும் வந்தானைப் பொன்மதுரைச்
சேவகன்றா னென்றுந் திரியாத சூரனென்றும்
நாடொறு நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறு நாடு கெடும். 90

## வெருவந்த செய்யாமை

இசைபயின்றார் வாதத் திறைவருமொன் றேனும்
இசைவன்றி .... வியற்றான் - இசைவொன்றத்
தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தால்
ஒத்தாங் கொறுப்பது வேந்து. 91

## கண்ணோட்டம்

வாண னிருகரமும் வைத்துப் பணிகருதி
நாதனறுப் பித்தருளு நன்னயத்தைப் போலக்
கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்கு
உரிமை யுடைத்திவ் வுலகு. 92

## ஒற்றாடல்

சீர்படைத்த முக்கட் சிவனன்ப னென்றெழுதும்
பேர்படைத்த சேரர் பெருமான்போல் - பார்மிசையின்
எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில். 93

## ஊக்கமுடைமை

பார்த்த குரவர் பணிமுயன்றார் கண்ணுதலார்
தீர்த்தத் தியலுந் திறநின்றார் - நீர்த்தடத்து
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு. 94

மேனிகழ்வ தேதெனினும் வென்றியெனத் தென்மதுரை
ஈசனொடு வாதத் தெதிர்நின்ற கீரனைப்போல்
உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து. 95

## மடியின்மை

கஞ்சுகநா தன்கோயிற் காலெலிக்கு மாட்டாதே
வஞ்சனைசெய் தானையிவண் வைத்துப்பார் - துஞ்சு
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
தாஅய தெல்லா மொருங்கு. 96

மாற னிறையருளால் வந்துவெல்லத் தோற்றளவில்
போர்விண்ட விந்திரனைப் போலவே சால
இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர். 97

## ஆள்வினை யுடைமை

பால னொருவன் பணிந்துகட வூரரனைக்
காலற் கடந்திருக்கக் கண்டோமே - ஞாலத்தின்
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர். 98

## இடுக்கணழியாமை

நக்கர் சிறிது நகைத்தலு முப்புரமும்
அக்கணமே வெந்துவிழு மாதலால் - மிக்க
இடுக்கண் வருங்கா னகுக வதனை
அடுத்தூர்வ தஃதொப்ப தில். 99

# அங்கவியல்

## அமைச்சு

தென்ன னிறைவரருள் சேர்ந்துசெங் கோல்செலுத்த
மன்னு குலச்சிறையே மந்திரியாம் - என்னை
அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றும்
திறனறிந்தான் தேர்ச்சித் துணை. 100

## சொல்வன்மை

சிவனடி யென்னுமயன் சீர்பெறுமுன் பின்னர்ச்
சிவசமதை சொல்லலும் சீர்போம் - எவருந்தம்
ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. 101

பரமனருள் வேண்டிப் பகர்ந்தசுர ரான
கரதூட ணன்முதலோர் காதை - வரவறிவீர்
ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு. 102

எவற்றினுமே லென்னவிறை வர் சொன்னதெல்லாம்
சிவப்பிரகா சத்தடங்கச் செப்பும் - தவத்தினர்போல்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொல் லின்மை யறிந்து. 103

## வினைத் தூய்மை

சூரனிழந் தானிழந்தான் சோதியரு ளுந்தாய
னாரிழந்த வெல்லா மடையுமே - தேரின்
அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை. 104

## வினைத் திட்டம்

தோழனென்று சொன்னவடித் தொண்டர் கிறைவர்தூது
ஆக நடந்து தரிதரிது காதலிபாற்
சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாம்
சொல்லிய வண்ணஞ் செயல். 105

குறுமுனிவு மீசனருள் கொண்டு கட லங்கை
வரையடிக் கீழடக்கு மாற்றால் சிறிதும்
உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்கு
அச்சாணி யன்னா ருடைத்து. 106

## வினைசெயல் வகை

இறையருளாற் செவ்வே ளிமையோரைக் காக்கும்
திறனாடிச் சூர்தடிந்த செய்கை யதுபோல்
முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல். 107

இறைவர்க்குத் தொண்டா யிடர்தீர்ந்த தன்றிப்
பெறுபயனும் வாகீசர் பெற்றார் - அறிஞர்
வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 108

கண்ணுதல்பா லாழிபெறக் கண்சாத்தித் தாள்காணா
வண்ண மொழிந்தநெடு மாலேபோல் - எண்ணி
வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று. 109

## தூது

பேதையரு நாவலரும் பேதமின்றி யேபொருந்தத்
தூதுசென்ற கொன்றைத் தொடையலார் போலவே
அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப் பார்க்
கின்றி யமையாத மூன்று. 110

## மன்னரைச் சேர்ந்தொழுகல்

ஐய னருள்புரிந்த வன்றுசம் பந்தர்தமைத்
தெய்வமெத் தந்தையருந் தேறினார் - நொய்தின்
இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும். 111

## குறிப்பறிதல்

உண்ணப் பொதிசோறு மூர்சிவிகை யும்பிறவும்
எண்ண மறிந்தடியார்க் கீந்தருளும் - கண்ணுதற்போற்
கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்றும்
மாறாநீர் வையக் கணி. 112

## அவை யறிதல்

பொல்லார்மு னெல்லாம் புகன்று சிவஞானம்
அல்லார்மு னல்லா ரடங்குதலால் - வல்லார்
ஒளியார்மு னொள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல். 113

இறைநூ லுரையாடார் இன்புற்றார் சால
அறிவா ருரைகேட்ட வன்றே - நெறிநின்று
கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து. 114

## அவையஞ்சாமை

சங்கத்தார் வாக்குந் தமிழுணர்த லாற்சொக்க
லிங்கத் தமிழ்ப்புலவ ரெல்லார்க்கும் - சிங்கமன்றே
கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முன்
கற்ற செலச்சொல்லு வார். 115

## நாடு

இறைசாருந் தென்னாடே நாடேனை நாடு
பிறவுடைய வேனும் பெறாகாண் - உறையுமவர்க்கு
ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு. 116

## அரண்

குன்றவில்லி காத்தருளுங் கூடலர ணேயன்றி
நின்ற வுளவெனினு நிற்குமோ - என்றும்
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்க ணில்லா தரண். 117

## பொருள் செயல்வகை

தந்தைபொருட் டெந்தைபிரான் சம்பந்தர்க் கீந்தகிழி
நந்திப் பயனனைந்து நல்கிற்றே - முந்தும்
அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள். 118

திகம்பரர்க்கு நஞ்சைத் திருமகளைப் பீதாம்
பரதரர்க் கீயும் பயோதி நிரந்தரமும்
இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
எல்லாருஞ் செய்வர் சிறப்பு. 119

## படைமாட்சி

எத்திறத்த நூலு மிலங்கு சிவஞான
சித்தியொன்று காணச் சிதையுமே - மெத்த
ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும். 120

ஆலமுகந் தானைமணந் தாள்படையே வெல்படைய
காலனையுந் தோற்றோடக் காணுதலால் - ஞாலத்து
கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்திற்கும்
ஆற்ற லதுவே படை. 121

## படைச்செருக்கு

இறையோ டெதிர்திறந்த தென்றாலுமென்ன
குறையோ பிறரையடுங் கூற்று - முறையேகாண்
கான முயலெய்த வம்பினில் யானை
பிழைத்தவே லேத்த லினிது. 122

## நட்பு

பிள்ளை யிறைவ ரருள்பெறலுங் கேட்டிருந்த
கள்ளவிழ்பூங் கோதையார் காதலாற் - சொல்லும்
புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும். 123

நன்னிழலி னீர்வைத்து நம்பர் நடுப்படையில்
தென்னாழி யாதருளுஞ் செய்தியான் - முன்னர்
உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
இடுக்கண் களைவதா நட்பு. 124

## நட்பாராய்தல்

மாறனது கேட்டி லுறுதியென மாணிக்கம்
கூறி விலையாக் கொடுக்குமிறை - ஆதலாற்
கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல். 125

## பழமை

வழுவுசெய்தும் மாலயர்க்கு வந்தரனே பின்னும்
பழமை கருதியருள் பண்ணும் - முழுதும்
அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர். 126

## தீ நட்பு

தக்க னுறவெனினுஞ் சங்கரன்ற னட்பிற்குத்
தக்கவனன் றென்றொறுத்தல் சாலுமே - மிக்க
பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது. 127

## கூடா நட்பு

ஆரூரர்க் காரூரர் போன்றொற்றி யூரர்செயும்
கூடாநட் பாலே குறைவரலால் ஓரும்
இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல் வேறு படும். 128

## பேதைமை

அரன்பர் வாகீச ரன்றமணை நீங்கப்
பெரிதின்ப மன்றியுண்டோ பீழை - தெரியிற்
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின் கட்
பீழை தருவதொன் றில். 129

## புல்லறிவாண்மை

ஈசனடி யாரிசையா தேயு மிசைந்தமணர்
தாமே கழுவேறுந் தன்மையால் ஞாலத்து
அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது. 130

ஆதி மொழியை யறியா னறிந்தேனென்று
ஓகியது மீளப்போ யோதியது - மேதமாம்
கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும். 131

எறும்புகடை யானைதலை யீசனைப்பூ சித்துப்
பெறுங்கதிகண் டுந்தேறார் பேய்கள் - அறிந்த
உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்து
அலகையா வைக்கப்படும். 132

## இகல்

ஆங்கா லிறைவ ரடிதொழுவார் செல்வமெல்லாம்
போங்கா லசுரர் பொரவருவார் - நீங்கா
இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு. 133

## பகைமாட்சி

கண்ணன் கடையிருந்த கண்ணுதலின் றாள்வணங்கி
உண்ணின்ற வாண னொடுபொருதான் - எண்ணி
வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை. 134

## பகைத்திறந் தெரிதல்

விளையாடிக் கீரனொடு வெல்வதற்குச் செல்லும்
இறையோனும் பின்பெகுளு மென்றாற் குறையாம்
பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று. 135

## உட்பகை

நாரதர்மா லுட்பகையாய் நம்பரடி பேணாத
வாறுசொல்லி முப்புரமும் மாய்வித்தா ராதலினால்
உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். 136

## பெரியாரைப் பிழையாமை

மன்றுடையார் குன்றை மதியா தெடுத்தரக்கன்
அன்று படுந்துயர மார்படுவார் - என்றும்
பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாரால்
பேரா விடும்பை தரும். 137

## பெண் வழிச் சேறல்

திசைவென் றவள்பதியுஞ் செல்லா தவள்பின்
அசைவின்றித் தானுலக மாளும் - இசையொன்ற
எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை இல். 138

## வரைவின் மகளிர்

புனிதரழன் மூழ்குதலும் போயழலின் மூழ்கும்
பனிமலர்மென் கோதையெழிற் பாவை ஒழியப்
பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையில்
ஏதில் பிணந்தழீஇ யற்று. 139

### கள்ளுண்ணாமை

அண்ணல் பழமலையை யண்ணாமுன் கள்ளுண்ண
எண்ணில் பெருந்துயர மெய்துதலான் - மண்ணுலகத்து
உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரால்
எண்ணப்பட வேண்டா தார். 140

### சூது

அரனடியார் நித்த மமுதுசெய வேண்டிக்
கவறுருட்டிக் கைவந்தா ரன்றிப் - பிறரெல்லாம்
வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. 141

### மருந்து

மண்ணுன் டவனறியா மண்ணுன்டையொன்று கொடுத்து
எண்ணருநோய்தீர்க்கு. மெழில்வேளூர்க் -
கண்ணுதல்போல்
நோய்நாடி நோய்முத னாடியது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். 142

## ஒழிபியல்

### குடிமை

மன்னு மரன்புலியூர் வாய்மை மதியானை
அன்னை வயிற்குறையென் றையுற்றார் - என்னை
நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும். 143

## மானம்

இறையருள்சேர் தென்னவனன் றிந்திரன்பாற் சென்றும்
குறையிரவான் போயிருந்தான் கூட - முறையன்றோ
இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல். 144

## பெருமை

சங்கரன்போய் நின்றளவிற் சங்கப் பலகையின்மேல்
அங்கிருந்தா னக்கீரனா யினுமென் - எங்கணும்போய்
மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். 145

## சான்றாண்மை

உலகர்க்குத் தந்தை யொருத்திக்குத் தாயாய்ப்
பலவு முபகரித்த பண்பின் - புலவர்
கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு 146

பன்றிக் குருளைக்குப் பன்றியாய்க் கண்ணுதலும்
சென்று முறைகொடுக்குஞ் செய்தியால் - என்றும்
கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு 147

இறையருள்சேர் தென்ன னிருங்கடலு மாழி
பிறழ நிலைநிறுத்தும் பேராற் கடல்பிறழ
ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்கு
ஆழி யெனப்படு வார். 148

## பண்புடைமை

முப்புரங்கள் கொன்றுமரன் மூவர்க் கருளியதை
இப்பொழுது தானுமுல கேத்துமே - செப்பின்
நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. 149

## நன்றியில் செல்வம்

எங்களிறை யன்பருக்கொன் றீயாமை யாற்பிறந்து
பங்கப் படத்துணிந்த பாவிதிருத் - தங்கியெனும்
அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றா டமியண்மூத் தற்று. 150

கல்வில் லுடையார் கருணைபெற மாட்டாது
வல்வினையிற் பட்டமுந்தும் வாதாவி - வில்வலன்போல்
நச்சுப் படாதவன் செல்வம் நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. 151

## நாணுடைமை

இறையருளும் தென்னவன்பா லிந்திரன்வந் தன்று
குறைபடலும் நாணியது கூறின் - முறையன்றோ
ஊனுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. 152

## குடிசெயல் வகை

பாணன் குடியுயரப் பண்டரனுங் கூடல்வரு
பாணனெனச் சாதாரி பாடுதலா - னாளும்
குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும். 153

## உழவு

தென்னாட் டுழவ ரிறைகொண்டு கண்ணுதலும்
அந்நாட் டிருந்துலக மாளுதலால் - தன்னோர்
பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். 154

## நல்குரவு

மூலலிங்க பூசை முயன்ற பயன்வருமுன்
சீல முடையவிப சித்தெனவே - ஞாலத்தில்
துப்பர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று. 155

## இரவு

ஈச ரிரந்தாலு மீந்தாரோ டொத்துயர்ந்தார்
நேச ரிடத்திரந்து நிற்றலால் - பேசின்
இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு 156

## இரவச்சம்

என்றியம்பி னார்மொழியாற் போலு மிறையாயும்
சென்றிரந்து நிற்குஞ் சிவன்றானும் - அன்றே
இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். 157

ஒருவர் செயவேண்டா வுலகியல்பா மென்னும்
அருகர்பிறர் கோள்சிதைக்கு மாற்றால் - வருவது
இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். 158

### கயமை

மணலமுதா மாறு மனையாட்குக் கூறிப்
பரனருடீர் மாமறையோன் பண்பின் நுவலும்
அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். 159

# 3. காமத்துப்பால்

## களவியல்

### தகையணங் குறுத்தல்

ஆரூரன் கண்டளவி லாரூரன் கோயிலிடை
ஆரூரிற் கென்றமைந்த வாயிழையைத் - தேரும்
அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொல் மாலுமென் னெஞ்சு. 160

இறைவ ரருள்கதிர்வே லெந்தை குறவர்
மடமகளைக் கண்டு வருந்திப் புகலும்
கடாஅக் களிற்றின்மேல் கட்படா மாதர்
படாஅ முலைமேற் றுகில். 161

### குறிப்பறிதல்

அரனருள்சேய் மான்மகளென் றாங்கிருவர் தங்கள்
இயல்பு மறிந்த விகுளை கருதுவது
கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில. 162

## புணர்ச்சி மகிழ்தல்

அரனடியா ரல்லா ரடைபதந் தானும்
இருநிலவின் பத்திழிவா மென்று - வருவதிது
தாமிவீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொல்
தாமரைக் கண்ணா னுலகு. 163

அல்லொளிசேர் கண்டத் தரனருள்சேய் மானீன்ற
வல்லியிரு கொங்கை மணந்ததற்பின் - சொல்லியது
கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள. 164

## நலம்புனைந்துரைத்தல்

மின்னுசடை வேந்தரருள் வேலனொரு மானீன்ற
பொன்னை மகிழ்ந்து புனைந்துரைக்கும் - இந்நிலத்து
நன்னீரை வாழி யனிச்சமே நின்னினும்
மென்னீரள் யாம்வீழ் பவள். 165

## காதற் சிறப்புரைத்தல்

நாதர் பரமகுரு நாதர் குறமகள்பாற்
காதன் மிகுதிசொலக் கண்டோமே - தீயசெழும்
பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர். 166

## நாணுத்துற உரைத்தல்

ஆதியருள் சேய்நா ணகன்றுமட மான்மகட்குத்
தோழி யெதிர்நின்று சொல்லியது கூறிய
காம முழந்து வருந்தினார்க கேம
மடலல்ல தில்லை வலி. 167

## அலராறி உறுத்தல்

பரனருள்சேய் கேட்கப் பசும்பொன்மா னீன்ற
குறமகட்டுத் தோழிநின்று கூறும் - திறனுவலின்
தாம்வேண்டி னல்குவர் காதலர் யாம்வேண்டுங்
கௌவை யெடுக்குமிவ் வூர். 168

## கற்பியல்

## பிரிவாற்றாமை

சூளுறவு செய்திறைவர் தோழர் பிரிவறிந்த
கோல்வளையார் கூறுவது தோழிக்குச் - சால
அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொல்
தேறியார்க் குண்டோ தவறு. 169

## படர்மெலிந்திரங்கல்

அரன்றனக்குத் தோழனெனு மாரூரன் சேணிற்
பிரிந்த வழிபரவை பேசும் - இரங்கி
மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா
என்னல்ல தில்லை துணை. 170

## கண் விதுப்பழிதல்

நந்தியருள் சேர்பரவை நம்பியைக்கா ணக்கிடையா
வெந்துயரா லாற்றுவித்த மெல்லிழைக்கு - வந்துசொலல்
கண்டாங் கலுழ்வ தெவன்கொலோ தண்டாநோய்
தாங்காட்ட யாங்கண் டது. 171

## பசப்புறுபருவரல்

பரனன்பர் நீங்கப் பரவைதனை யாற்றும்
புரிகுழற் பாங்கி புகலும் - பெரிதும்
பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
துறந்தா ரவரென்பா ரில். 172

## தனிப்படர் மிகுதி

கண்ணுதலார் தோழன் கருத்தையறிந் தாற்றினாய்
என்னப் பரவை யிகுளைக்குப் - பன்னுவது
நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை. 173

## நினைந்தவர் புலம்பல்

நம்பி தனைநினைந்த நம்பரருள் சேர்பரவை
துன்பமுற்றுத் தோழிக்குச் சொல்லியது - சென்றிலிருந்து
தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் நாணார்கொல்
எந்நெஞ்சத் தோவா வரல். 174

## கனவு நிலையுரைத்தல்

தம்பிரான் றோழர் தமையிகழ்ந்த தோழிக்கு
மங்கை பரவை மறுத்துரைக்கும் - எங்கிருந்தும்
துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கால்
நெஞ்சத்த ராவர் விரைந்து. 175

## பொழுது கண்டிரங்கல்

ஆற்றுவித்த தோழிக் கானன்ப ரைப்பிரிந்த
கோற்றொடியா ரூர்மடந்தை கூறுவது - மேற்சென்று
காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
மாலைக்குச் செய்த பகை. 176

## உறுப்பு நலனழிதல்

அரனன்பர் நீங்குதலு மாற்றாமை கண்டு
பரவைக்குத் தோழி பகரும் தலைவர்
தணந்தமை சால லறிவிப்ப போலும்
மணந்தநாள் வீங்கிய தோள். 177

## நெஞ்சோடு கிளத்தல்

அரனருள்சேர் நம்பிபிரி வாற்றாம லாரூர்ப்
பரவைதனி நின்று பதைத்துக் - கருதும்
நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து. 178

## நிறை யழிதல்

வேடர்க் கருளும் விமலர் துணைபிரிவு
நீடப் பரவை நிறையழிந்து கூறியது
காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு. 179

## அவர்வயின் விதும்பல்

இறைவரருள் சேர்பரவை யேந்தல்பிரி வாற்றிப்
பகருமிகு ளைக்குப் பகரும் எதிர்நின்று
காண்மகற் கொண்கனைக் கண்ணாரக் கண்டபின்
நீங்குமென் மென்றோட் பசப்பு. 180

## குறிப்பறிவுறுத்தல்

இறைவர் துணை நீங்கி யெழிற்பரவை யோடும்
உறையுநாட் பாங்கிக் குணர்த்தும் - செறியும்
மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
அணியிற் றிகழ்வதொன் றுண்டு. 181

## புணர்ச்சி விதும்பல்

ஈசனன்ப ரோடு மியைந்த பரவைதனைப்
பேசியதொ ழிக்கவளும் பேசியது கூறின்
எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து. 182

## நெஞ்சோடு புலத்தல்

தம்பிரான் றோழர் தவறுகண்டுங் கூடுவதற்கு
அன்பு செயும்பரவை யார்மொழிவார் - என்றும்
அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா தது. 183

## புலவி

அரன்வாயி லாகச்சென் றாரூரரோடு
பரவையா ரூடலுணர் பண்பின் - உரைசெய்யும்
உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
மிக்கற்றால் நீள விடல். 184

## புலவி நுணுக்கம்

எல்லாரு முய்வதற்கா வீசனுலாப் போதுதலும்
புல்லா துமையாள் புலந்தளவிற் - சொல்லாடும்
பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
நண்ணேன் பரத்தநின் மார்பு. 185

## ஊடலுவகை

தண்டி யுணர்த்தத் தலைவி புலவிதீர்த்
தண்டிப் பெருமா னணைந்தளவிற் - கண்டருளும்
ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின். 186

# 4. வீட்டின்பால்

## பதிமுதுநிலை

வள்ளுவருந் தாமு மதித்தபொரு ளொன்றென்றே
தெள்ளு தமிழ்விரகாய்ச் செப்பியது - சொல்லின்
அகர வுயிர்போல லறிவாகி யெங்கும்
நிகரிலிறை நிற்கு நிறைந்து. 187

## உயிரவை நிலை (பசுநிலை)

பொன்னர்பிறர் காணாரப் புண்ணியனைப் புண்ணியனும்
அன்னவர்முற் றோன்றல ராதலினால் - சொன்னதுகேள்
ஊமன்கண் போல வொளியு மிகவிருளே
வாமன்கண் காணா தவை. 188

## இருண் மல நிலை (பாசநிலை)

அருண கிரியறியா ரண்ணலெனத் தத்தம்
கருவி யுபகரிக்கக் கண்டும் - இருவர்க்கும்
அன்றளவி யுள்ளொளியோ டாவி யிடையடங்கி
இன்றளவு நின்ற திருள். 189

## அருளது நிலை

இறைவ ரெதிர்ப்பட்டு மிவரருள்வேண் டாமற்
பிறவசுர ரெல்லாம் பெறுதல் - அறையிற்
பரப்பமைந்த கேண்மினிது பாற்கலன்மேற் பூனை
கரப்பருந்த நாடுங் கடன். 190

## அருளுருநிலை

வாதவூரர்க் காள்போல வந்த பரசிவனை
யாரவனென் றெண்ணி யறிந்தார்கொல் - பேரருளாற்
பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற்காம்
போர்வையெனக் காணார் புவி. 191

## அறிவு நெறி

நீற்றறையின் மற்றிடத்து நின்றிறைவ னன்பருக்குத்
தோற்றுவதின் றித்துணையாய்த் துன்பமுறாது - ஆற்றுதலால்
ஊனுயிரால் வாழு மொருமைத்தே யூனொடுயிர்
தானுணர்வோ டொன்றாந் தரம். 192

## உயிர் விளக்கம்

துறைபிழைத்துச் சென்று சுமந்தாலு மீசன்
உணர்வோடொன் றாகுந்தரம்பார் - தரையில்
கிடைக்கத் தகுமேநற் கேண்மையார்க் கெல்லாம்
எடுத்துச் சுமப்பானை யின்று. 193

## இன்புறு நிலை

வாதவூ ரன்பிறர்போல் வந்தவரா னந்தமுறும்
போதினிய தாகப் புணருமறை - ஆதலினால்
இன்பதனை யெய்துவார்க் கீயு மவர்க்குருவம்
இன்பகன மாதலினா லில். 194

## ஐந்தெழுத்தருணிலை

உண்டிலையென் றாகமங்க ளோதிமத பேதத்தால்
கொண்டநெறி யுங்கதியுங் கூறுவதென் - அண்டர்பிரான்
எல்லா வகையு மியம்பு மிவனகன்று
நில்லா வகையை நினைந்து. 195

## அடைந்தோர் தன்மை

சிதம்பரஞ் சிந்தித்தார் சிவலோக மன்றி
விதந்தறியா ரொன்றும் விரும்பிப் பயந்தவிர
எல்லா மறியு மறிவுறினு மீங்கிவரொன்று
அல்லா லறியா ரற. 196

வாழி திருமன்றங் கண்ட மலர்க்கண்கள்
வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்
வாழி யவனை வணங்கு முடிச்சென்னி
வாழி யவன் சீர்பாடும் வாய்.

*- ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்*

*****

உ

குருபாதம்

# 3. நீதிவெண்பா

## கடவுள் வாழ்த்து

மூதுணர்ந்தோர் ஓதுசில மூதுரையைப் பேதையேன்
நீதிவெண்பா வாக நிகழ்ந்துவேன் - ஆதிபரன்
வாமான் கருணை மணிஉதரம் பூத்தமுதல்
கோமான் பெருங்கருணை கொண்டு.

## நூல்

### 1. நல்லோர் எங்கும் தொன்றலாம்

தாமரைபொன் முத்துச் சவரம்கோ ரோசனைபால்
பூமருதேன் பட்டுப் புனுகுசவ்வாது - ஆம்அழல்மற்று
எங்கே பிறந்தாலும் எள்ளாரே நல்லோர்கள்
எங்கே பிறந்தாலும் என்.

### 2. உயர்வடைய உயரிடமே சேர்க

அரிமந் திரம்புகுந்தான் ஆனை மருப்பும்
பெருகொளிசேர் முத்தும் பெறலாம் - நரிநுழையில்
வாலும் சிறிய மயிர்என்பும் கர்த்தபத்தின்
தோலுமல்லால் வேறுமுண்டோ சொல்.

### 3. அறிவடையோர் பகைவனாகினும் நண்பனே

அறிவன் பகையேனும் அன்புசேர் நட்பாம்
சிறுவன் பகையாம் செறிந்த - அறிவுடைய
வென்றி வனசரன்தான் வேதியனைக் காத்தான் முன்
கொன்றதொரு வேந்தைக் குரங்கு.

## 4. இன்சொல்லே யாவரும் கேட்பர்

மென்மதுர வாக்கால் விரும்பும் சகம் கடின
வன்மொழியி னால்இகழும் மண்ணுலகம் - நன்மொழியை
ஓதுகுயில் ஏதங்கு உதவியது கர்த்தபந்தான்
ஏதபரா தம்செய்தது இன்று.

## 5. அன்பினால் மாற்றோரிடமும் நன்மை

பகைசேறும் எண்ணான்கு பல்கொண்டே நல்நா
வகைசேர் சுவைஅருந்து மாபோல் - தொகைசேர்
பகைவரிடம் மெய்யன்பு பாவித்து அவரால்
சுகமுறுதல் நல்லோர் தொழில்.

## 6. பயனற்றவை

காந்தன்இல் லாத கனங்குழலாள் பொற்புஅவமாம்
சாந்தகுணம் இல்லார் தவம்அவமாம் - ஏந்திழையே
அன்னைஇல்லாப் பிள்ளை இருப்பது அவம் அவமே
துன்னெயிறில் லார்ஊண் சுவை.

## 7. கல்விக்கு இளமையே காலம்

வருந்தவளை வேய்அரசர் மாமுடியின் மேலலாம்
வருந்த வளையாத மூங்கில் - தரித்திரமாய்
வேழம்பர் கைப்புகுந்து மேதினியெல் லாம்திரிந்து
தாழும்அவர் தம்மடிக்கீழ்த் தான்.

## 8. இரப்பது அற்பமே

நொய்துஆம் திரணத்தின் நொய்தாகும் வெண்பஞ்சின்
நொய்தாம் இரப்போன் நுவலுங்கால் - நொய்யசிறு
பஞ்சுதனில் நொய்யானைப் பற்றுதோ காற்றணுக
அஞ்சுமவன் கேட்பது அறிந்து.

## 9. நலமாகவாழ ஓர் பொழுதுண்க

ஒருபோது யோகியே ஒண்டளிர்க்கை மாதே
இதுபோது போகியே யென்ப - திரிபோது
ரோகியே நான்குபோது உண்பான் உடல்விட்டுப்
போகியே யென்று புகல்.

## 10. எல்லாம் அறிவர் ஞானியர்

கண்ணிரண்டே யாவர்க்கும் கற்றோர்க்கு மூன்றுவிழி
எண்ணுவழி ஏழாகும் ஈவோர்க்கு - நண்ணும்
அநந்தம் தவத்தால் அருள்ஞானம் பெற்றோர்க்கு
அநந்தம் விழியென்று அறி.

## 11. இல்வாழ்தலே நல்வழி

உற்றபெருஞ் சுற்றம் உறநன் மனைவியுடன்
பற்றிமிக வாழ்க பசுவின்பால் - பற்றி
நதிகடத்தல் அன்றியே நாயின்வால் பற்றி
நதிகடத்தல்உண்டோ நவில்.

## 12. துறந்தோரே உலகம் ஆள்பவர்

ஆசைக்கு அடியான் அகிலலோ கத்தினுக்கும்
ஆசற்ற நல்லடியான் ஆவானே - ஆசை
தனையடிமை கொண்டவனே தப்பாது உலகம்
தனையடிமை கொண்டவனே தான்.

## 13. பாவம் பலவகையாம்

ஆன்அந் தணர்மகளிர் அன்பாம் குழந்தைவதை
மானம் தெறும்பிசி வார்த்தைஇவை - மேனிறையே
கூறவரு பாவம் குறையாதுஒவ் வொன்றுக்கும்
நூறுஅதிகம் என்றே நுவல்.

## 14. இவர் இழிவினை எய்துவர்

பெற்றமைக்கும் என்னாப் பெரியோரும் பெற்றபொருள்
மற்றமையும் என்றே மகிழ்வேந்தும் - முற்றியநன்
மானமிலா இல்லாளும் மானமுறு வேசியரும்
ஈன முறுவார் இவர்.

## 15. கல்விதன்மாண்பு கற்றோரே அறிவர்

கற்றோர் கனம்அறிவர் கற்றோரே கற்றறியா
மற்றோர் அறியார் வருத்தமுறப் - பெற்றறியா
வந்தி பரிவாய் மகவைப் பெறும்துயரம்
நொந்துஅறிகு வாளோ நுவல்.

## 16. செயலின் முன் எண்ணுக

செய்யும் ஒருகருமம் தேர்ந்து புரிவதுஅன்றிச்
செய்யின் மனத்தாபம் சேருமே - செய்யவொர
நற்குடியைக் காத்த நகுலனைமுன் கொன்றமறைப்
பொற்கொடியைச் சேர்துயரம் போல்.

## 17. நயமான சொல்லால் நன்மையே

நாவின் நுனியில் நயமிருக்கின் பூமாதும்
நாவினிய நல்லோரும் நண்ணுவார் - நாவின்நுனி
ஆங்கடின மாகில் அத்திருவும் சேராள்முன்
ஆங்கே வரும்மரண மாம்.

## 18. புல்லோர்க்கண் எல்லாம் நஞ்சே

ஈக்கு விடம்தலையில் எய்தும் இருந்தேளுக்கு
வாய்த்த விடம்கொடுக்கில் வாழுமே - நோக்கரிய
பைங்கண்அர வுக்குவிடம் பல்அளவே துர்ச்சனருக்கு
அங்கம்முழு தும்விடமே ஆம்.

## 19. அடங்காமை தீயவர் பண்பு

துர்ச்சனரும் பாம்பும் துலையொக்கி னும்பாம்பு
துர்ச்சனரை யொக்குமோ தொகையே - துர்ச்சனர்தாம்
எந்தவிதத்தாலும் இணங்காரே பாம்புமணி
மந்திரத்தால் ஆமே வசம்.

## 20. அல்லோரின் சேய்மை நன்றே

கொம்புளதற்கு ஐந்து குதிரைக்கு பத்துமுழம்
வெம்புகரிக்கு ஆயிரம்தான் வேண்டுமே - வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்து
நீங்குவதே நல்ல நெறி.

## 21. புல்லோரை திருத்துவது எளிதல்ல

அவ்விய நெஞ்சத்து அறிவில்லாத் துர்ச்சனரைச்
செவ்வியர் ஆக்கும் செயலுண்டோ - திவ்வியநல்
கந்தம் பலவும் கலந்தாலும் உள்ளியது
கந்தம் கெடுமோ கரை.

## 22. இருமலும் புல்லோரும் நிகரே

துன்னும் இருமலும் துர்ச்சனரும் ஒக்குமே
மன்னும் இனிமையால் மாறாகிப் - பன்னும்
கடுவும் கடுநேர் கடுமொழியும் கண்டால்
கடுக வசமாகை யால்.

## 23. புல்லோர் பண்பு

செங்கமலப் போதுஅலர்ந்த செவ்விபோ லும்வதனம்
தங்கு மொழிசந் தனம்போலும் - பங்கியெறி
கத்தரியைப் போலும்இளங் காரிகையே வஞ்சமனம்
குத்திரர்பால் மூன்று குணம்.

## 24. கடையன் சொல் நிற்காது

நீசனோ நீசன் நினையுங்கால் சொல்தவறும்
நீசனே நீசன் அவனையே - நீசப்
புலையனாம் என்றுரைக்கும் புல்லியனே மேலாம்
புலையனாம் என்றே புகல்.

## 25. தீயவர்தம் ஒழுக்கம் போற்றாதே

ஞானம்ஆ சாரம் நயவார் இடைப்புகழும்
ஏனைநால் வேதம் இருக்குநெறி - தான்மொழியில்
பாவநிறை சண்டாளர் பாண்டத்துக் கங்கைநீர்
மேவுநெறி யென்றே விடு.

## 26. கொடியவரை நல்லோர் அணுகார்

குணநன்கு உணராக் கொடியோர் இடத்தில்
குணநன் குடையார் குறுகார் - குணமுடைமை
நண்ணாச் சமண நகரத்தில் தூசொலிக்கும்
வண்ணானுக்கு உண்டோ வழக்கு.

## 27. இடத்தினால் தான் சீர் சிறப்பு

ஆனை மருப்பும் அருங்கவரி மான்மயிரும்
கான வரிஉகிரும் கற்றோரும் - மானே
பிறந்தஇடத்து அன்றிப் பிறிதொருதே சத்தே
செறிந்தஇடத்து அன்றோ சிறப்பு.

## 28. நிலைதவறாமை பெருமை

தலைமயிரும் கூருகிரும் வெண்பல்லும் தந்தம்
நிலையுடைய மானவரும் நிற்கும் - நிலைதவறாத்
தானத்தில் பூச்சியமே சாரும் நிலைதவறும்
தானத்தில் பூச்சியமோ தான்.

## 29. ஞானியர்தம் சிறப்பு

வென்றி வரியுகிரும் வெண்கவரி மான்மயிரும்
துன்றுமத யானைச் சுடர்மருப்பும் - நின்றநிலை
வேறுபடி னும்சிறப்பாம் மெய்ஞ்ஞானி நின்றநிலை
வேறுபடி னும்சிறப்பா மே.

## 30. நன்மனையாள் பண்பு

அன்னை தயையும் அடியாள் பணியும்மலர்ப்
பொன்னின் அழகும் புவிப்பொறையும் - வன்னமுலை
வேசி துயிலும் விறல்மந் திரிமதியும்
பேசில் இவையுடையாள் பெண்.

## 31. மகளிரின் வாக்கு நிலை

பெண்ணொருத்தி பேசில் பெரும்பூமி தான்அதிரும்
பெண்ணிருவர் பேசில்விழும் வான்மீன்கள் - பெண்முவர்
பேசில் அலைசுவறும் பேதையே பெண்பலர்தாம்
பேசில்உலகு என்னாகுமோ பின்.

## 32. ஈயுகத்தில் இல்லந்தோறும் கூற்றுவன்

என்னே கிரேதத் திரேணுகையே கூற்றுவனாம்
தன்னோர் திரேதத்திற் சானகியே - பின்யுகத்தில்
கூடும் திரௌபதியே கூற்றாம் கலியுகத்தில்
வீடுதொறும் கூற்றுவனா மே.

## 33. அற்பர் நன்மை செய்யார்

கற்பூரம் போலக் கடலுப்பு இருந்தாலும்
கற்பூரம் ஆமோ கடலுப்பு - பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியர்ஆ வாரோ புகல்.

## 34. நல்லோர் பண்பு

சீலமில்லான் ஏதேனும் செப்பிடினும் தானந்தக்
காலம் இடமறிந்து கட்டுரைத்தே - ஏலவே
செப்புமவ னும்தானே சிந்தைநோ காதகன்று
தப்புமவன் உத்தமனே தான்.

## 35. ஆர்ப்பரிப்பவர் புல்லியர்

சிற்றுணர்வோர் என்றும் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே - வெற்றிபெறும்
வெண்கலத்தின் ஓசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தில் உண்டோ ஒலி.

## 36. அறம் செய்ய காலம் ஏன்

உள்ளபொழுது ஏதும் உவந்தளிப்பது அல்லாமல்லூர்
எள்ளளவும் ஈய இசையுமோ - தெள்ளுதமிழ்ச்
சீரளித்தோன் உண்டநாள் சேர்மேகத் துக்கருந்த
நீரளித்த தோமுந்நீர் நின்று.

## 37. தீயவரின் சேய்மை நன்று

பேதையரைக் கண்டால் பெரியோர் வழிவிலகி
நீதியொடு போதல் நெறியன்றோ - காதுமத
மாகரத்த யானை வழிவிலகல் புன்மலம்தின்
சூகரத்துக்கு அஞ்சியோ சொல்.

## 38. உள்ளதும் அல்லாததும்

மந்திரமும் தேவும் மருந்தும் குருவருளும்
தந்திரமும் ஞானம் தரும்முறையும் - யந்திரமும்
மெய்யெனில் மெய்யாய் விளங்குமே மேதினியில்
பொய்யெனில் மெய்யாகிப் போம்.

## 39. அடிவர் வெல்ல அரிதானவர்

ஈசன்எதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுயர்ந்த
நேசர்எதிர் நிற்பது அரிதாமே - தேசுவளர்
செங்கதிர்முன் நின்றாலும் செங்கதிர வன்கிரணம்
தங்குமணல் நிற்கரிதே தான்.

## 40. அடியவர் கண்ணே கடவுள் திறம்மிகும்

முற்றும் இறைசெயலே முற்றிடினும் தன்அருளைப்
பெற்றவர்தம் பாலே பெரிதாகும் - பற்றுபெருந்
தாபத் திடத்தே தழன்றிடினும் நற்சோதி
தீபத் திடத்தே சிறப்பு.

## 41. நல்லார் நினையாதவர்

கன்னியரை பொன்னாண் கழிந்தோரை மற்றயலார்
பன்னியரை மாயப் பரத்தையரை - முன்னரிய
தாதியரை நல்லோர் தழுவநினை யார்நரகத்
தீதுவரு மென்று தெரிந்து.

## 42. தாயர் ஐவர்

தன்னை யளித்தாள் தமையன்மனை குருவின்
பன்னி அரசன் பயில்தேவி - தன்மனையைப்
பெற்றாள் இவரைவர் பேசில் எவருக்கும்
நற்றாயர் என்றே நவில்.

## 43. குளிரில் வெம்மையும் கோடையில் தண்மையும்

வாவியுறை நீரும் வடநிழலும் பாவகமும்
ஏவனைய கண்ணார் இளமுலையும் - ஓவியமே
மென்சீத காலத்து வெம்மைதரும் மெம்மைதனில்
இன்பாரும் சீதளமா மே.

## 44. இன்னாரின்னார்க்கு இவையிவை இல்லையெனல்

உற்றதொழில் செய்வோர்க்கு உறுபஞ்சம் இல்லையாம்
பற்றுசெபத் தோர்க்கில்லை பாவங்கள் - முற்றும்
மவுனத்தோர்க்கு இல்லை வருகாலம் துஞ்சாப்
பவனத்தோர்க்கில்லை பயம்.

## 45. செல்வத்தின் சிறப்பு

ஆபத்து வந்தால் அரும்பொருள் தான்வேண்டுமே
ஆபத்தேன்பூமாது அருகிருந்தால் - ஆபத்து
வந்தால் அவளும் மருவாமல் எப்பொருளும்
அந்தோ வுடன்போம் அறி.

## 46. பொருளால் துன்பம்

இன்னல் தரும்பொருளை ஈட்டுதலும் துன்பமே
பின்னதனைப் பேணுதலும் துன்பமே - அன்னது
அழித்தலும் துன்பமே அந்தோ பிறர்பால்
இழத்தலே துன்பமேயாம்.

## 47. வினைப்பயன் விடாது

தானே புரிவினையால் சாரும் இருபயனும்
தானே அனுபவித்தல் தப்பாது - தான்னூறு
கோடிகற்பம் சென்றாலும் கோதையே செய்தவினை
நாடிநிற்கும் என்றார் நயந்து.

## 48. ஞானிக்கு துன்பமில்லை துட்டனுக்கு இன்பமில்லை

துய அறிவினர்முன் சூழ்துன்ப மில்லையாம்
காயும் விடம்கருடர்க்கு இல்லையாம் - ஆயுன்கால்
பன்முகன்சேர் தீமுன் பயில்சீத மில்லையாம்
துன்முகனுக்கு உண்டோ சுகம்.

## 49. தனித்துண்டல் தகாது

தென்புலத்தார் தெய்வம் விருந்துஒக்கல் என்றிவரோடு
இன்புறத் தானுண்டல் இனிதாமே - அன்புறவே
தக்கவரை இன்றித் தனித்துண்டல் தான்கவர்மீன்
கொககருந்தல் என்றே குறி.

## 50. அடியாரிடையே ஆண்டவன் நிலைப்பான்

இந்திரவி நீள்கிரணம் எங்கும் நிறைந்தாலும்
இந்தரவி காந்தத் திலங்குமே - இந்திரவி
நேந்திரத்தோன் எங்கும் நிறைந்தாலும் நீத்தனருள்
நேந்திரத்தோர் பாலே நிறைவு.

## 51. ஆண்டவனை வணங்கு

தாமோ தரன்முதலோர் சாதல்நூல் சாற்றுவதும்
பூமேலோர் ஒன்றுவதும் கண்டோமே - நாமுடலை
நேசிப்பது என்னோ நிலையாகும் சங்கரனைப்
பூசிப்ப தொன்றே புகல்.

## 52. இறப்பதற்கு முன் இறைவனடி தொழு

அரசின் இலையதனின் அக்கிரமத் தினின்று
விரைய விழுதுளியே போலும் - புரையுடைய
ஆக்கைவிடா முன்னம் அரன்பாதம் பூசித்தல்
நோக்கல்நன்று என்றே நவில்.

## 53. உயர்ந்த பொருள்கள்

சத்தியத்தை வெல்லாது அசத்தியந்தான் நீள்பொறையை
மெத்திய கோபமது வெல்லாது - பத்திமிகு
புண்ணயத்தை பாவமது வெல்லாது போர்அரக்கர்
கண்ணனைத்தான் வெல்லுவரோ காண்.

## 54. நற்புதல்வரைப் பெறுக

பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பேறலின்ஓர்
நற்புதல்வனைப் பெறுதல் நன்றாமே - பொற்கொடியே
பன்றிபல குட்டி பயந்ததினால் ஏதுபயன்
ஒன்றமையாதோ கரிக்கொன்று ஓது.

## 55. பெண்மனத்தையாரறிவார்

அத்தி மலரும் அருங்காக்கை வெண்ணிறமும்
கத்துபுனல் மீன்பதம் கண்டாலும் - பித்தரே
கானார் தெரியல் கடவுளரும் காண்பரோ
மானார் விழியார் மனம்.

## 56. யோகிக்கு பிணியில்லை

காளவிடப் பாந்தள் கருடனைக் கட்டுமோ
வாளெரியைக் கட்டுமோ வன்கயிறு - நீளும்
பவமருளும் பாசம்வெம் பஞ்சேந் திரியம்
சிவயோகியைப் பிணியாவே.

## 57. புண்ணியமே வாழ்வு

புத்தியொடு முத்திதரும் புண்ணியத்தா லன்றியே
மத்தமிகு பாவத்தால் வாழ்வாமோ - வித்துபயிர்
தாயாகியே வளர்க்கும் தண்புனலால் அல்லாது
தீயால் வளருமோ செப்பு.

## 58. அடியவர் பின் ஆண்டவன்

சிவனே சிவனே சிவனேயென் பார்பின்
சிவனுமை யாளொடும் திரிவன் - சிவனருளால்
பெற்றஇளங் கன்றைப் பிரியாமல் பின்னோடிச்
சுற்றுபசுப் போல் தொடர்ந்து.

## 59. ஈவதை நிறுத்தாதே

தாமும்கொ டார்கொடுப் போர்தமையும் ஈயாதவகை
சேமம்செய்வாரும் சிலருண்டே - ஏமநிழல்
இட்டுமலர் காய்கனிகள் ஈந்துதவும் நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளனவே காண்.

## 60. ஈவோர் வருந்தாமல் ஏற்றல் நன்று

ஆயுமலர்த் தேன்வண்டு அருந்துவது போலிரப்போர்
ஈயுமவர் வருந்தாது ஏற்றலறம் - தூயயிளம்
பச்சிலையைக் கீடமறியாப் பற்றி அரிப்பதுபோல்
அச்சமுற வாங்கல் அகம்.

## 61. இவர் பிரிவால் இவை நீங்கும்

மாதா மரிக்கின் மகன்நாவின் நற்சுவைபோம்
தாதா வெனில்கல்வி தாமகலும் - ஓதிலுடன்
வந்தோன் மரித்துவிடில் வாகுவலிபோம் மனையேல்
அந்தோ இவையாவும் போம்.

## 62. காணத் தக்கன தகாதன

ஓதுபொருள் கண்டோர்க்கு உறுமாசை நீதியிலாப்
பாதகரைக் கண்டோர்க்குப் பாவமாம் - சீதமலர்
கண்டோர்க் குறும்வாசம் மற்றமைந்த நற்றவரைத்
கண்டோர்க்கு உடனாம் கதி.

## 63. தீயோர் செல்வம் நல்லவர்க்கு யதவாது.

பாவிதனம் தண்டிப்போர் பாலாகும் அல்லதருள்
மேவுசிவன் அன்பர்பால் மேவாதே - ஓவியமே
நாயின்பால் அத்தனையும் நாய்தனக்காம் அன்றியே
துயவருக்கு ஆகுமோ சொல்.

## 64. துன்பத்திலும் நல்லவர் நல்லவராவார்

பொன்னும் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம்பட வருத்தம் செய்தாலும் - முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து.

## 65. எக்காலத்தும் பகைவராவோர்

வேசியரும் நாயும் விதிநூல் வயித்தியரும்
பூசுரரும் கோழிகளும் பொன்னனையாய் - பேசில்ஓரு
காரணந்தான் இன்றியே கண்டவுடனே பகையாம்
காரணந்தான் அப்பிறப்பே காண்.

## 66. அழகைக்கொடுப்பன

அன்னமனையாய் குயிலுக்கு ஆனவழகு யின்னிசையே
கன்னல் மொழியார்க்கு கற்பாமே - மன்னுகலை
கற்றோர்க்கு அழகு கருணையே ஆசைசமயக்கு
அற்றோர்க்கு அழகு பொறையாம்.

## 67. நல்லதாயினும் எண்ணிச்சொல்லுக

இதமகித வார்த்தை எவர்கேனும் மேலாம்
இதமெனவே கூறிலிதமன்றே - இதம்உரைத்த
வாக்கினால் ஏரண்ட மாமுனியும்சோழனொடு
தேக்குநீர் வீழ்ந்தொழிந்தான் சேர்ந்து.

## 68. மேன்மையானவர் இருவகையினர்

இத்தரையோர் தன்னில் இருவரே மேலானோர்
சித்தி ரசவாதி சிவயோகி - முத்தனையாய்
நல்குரவு முற்பவமும் நாசம் புரிவாரே
அல்லவரே வீரியக் கீடம்.

## 69. ரசவாதி யோகிகளின் முக்குணங்கள்

அற்றசிவ யோகிக்கு அருஞ்சின்னம் மூன்றுண்டு
பற்றலகை உன்மத்தர் பாலரியல் - முற்றிரச
வாதிக்குச் சின்னம் மூன்றுண்டே மகிழ் போகம் ஈதல்
இரவாகை என்று.

## 70. நல்லவர் தீயவர் செயல்

வல்லவர்பால் கல்வி மதம்ஆ ணவம்போக்கும்
அல்லவர்பால் கல்வி அவையாக்கும் - நல்லிடத்தில்
யோகம் பயில்வார் உயர்ந்தோர் இழிந்தோர்கள்
போகம் பயில்வோர் புரிந்து.

## 71. கற்றவராயினும் தீயோர் தீயவரே.

தீயவர்பால் கல்வி சிறந்தாலும் மற்றவரைத்
துயவரேன்று எண்ணியே துன்னற்க - சேயிழையே
தண்ணொளிய மாணிக்கம் சர்ப்பம் தரித்தாலும்
நண்ணுவரோ மற்றதனை நாடி.

## 72. நீத்தோருக்கு உலகதுன்பமில்லை

ஊருர் யெனும்வனத்தே ஒள்வாட்கண் மாதரெனும்
கூருர் விடமுட்குழாம் உண்டே - சீரூர்
விரத்திவை ராக்கியவி வேகத்தொடு தோல்
உரத்தணியத் தையென் றோது.

## 73. இவர்களுக்கு இவையில்லை

போற்று குருகிளைஞர் பொன்னசை யோர்க்கிலலை
தோற்று பசிக்கில்லை சுவைபாகம் - தேற்றுகல்வி
நேசர்க்கு இல்லைசுகமும் நித்திரையும் கைமுகர்தம்
ஆசைக்கில்லையாம் மானம்.

## 74. தீயவருக்கு இடம்கொடுக்கக் கூடாது

நன்றறியாத் தீயோர்க் கிடமளித்த நல்லோர்க்கும்
துன்று கிளைக்கும் துயர்சேரும் - குன்றிடத்தில்
பின்னிரவில் வந்தகரும் பிள்ளைக் கிடமகொடுத்த
அன்னமுதல் பட்டது போலாம்.

## 75. நல்லோர் தீயவரில்பு

மனம்வேறு சொல்வேறு மன்னு தொழில்வேறு
வினைவேறு பட்டவர்பால் மேவும் - அனமே
மனமொன்று சொல்லொன்று வான்பொருளும் ஒன்றே
கனம்ஒன்று மேலவர்தம் கண்.

## 76. இதற்கு இதுவழகு

கண்ணுக்கு இனிய சபைக்குமணி கற்றோனே
விண்ணுக்கு இனியமணி வெய்யோனே - வண்ணநறும்
சந்த முலையாள் சயனத்து இனியமணி
மைந்தன் மனைக்கு மணி.

## 77. நல்லோர் நண்ணம்பற்கு உயிருமளிப்பர்

பாலின்நீர் தீயணுகப் பால்வெகுண்டு தீப்புகந்து
மேலும்நீர் கண்டமையும் மேன்மைபோல் - நூலின்நெறி
உற்றோர் இடுக்கண் உயிர்கொடுத்தும் மாற்றுவரே
மற்றோர் புகல மதித்து.

## 78. அடிவர்பொருள் கவர்தலாகாது

அந்தோ புரமெரித்த அண்ணலடி யார்பொருள்கள்
செந்தீயினும் கொடிய தீக்கண்டாய் - செந்தீயை
நீங்கின் சுடாதே நெடுந்தூரம் போனாலும்
ஈங்கச் சுடுமே இது.

## 79. தீயோர் கேண்மை தீயவே பயக்கும்

நிந்தையிலாத் துயவரும் நிந்தையரைச் சேரிலவர்
நிந்தையது தம்மிடத்தே நிற்குமே - நிந்தைமிகு
தாலநிழில் கீழிருந்தான் ஆன்பா லருந்திடினும்
பாலதெனச் சொல்லுமோ பார்.

## 80. தீயவர் நற்சொல் ஏற்கார்

கன்மமே பூரித்த காயத்தோர் தம்செவியில்
தன்மநூல் புக்காலும் தங்காதே - சன்மமெலும்
புண்டுசமிக்கும் நாய் ஊணாவின் நெய்யதனை
உண்டு சமிக்குமோ ஓது.

## 81. மணமகன் இவனாவான்

பெண்ணுதவுங் காலைப் பிதாவிரும்பும் வித்தையே
எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய் - நண்ணிடையில்
கூரியநல் சுற்றமும் குலம்விரும்பும் காந்தனது
பேரழுகு தான்விரும்பும் கண்.

## 82. விருப்பு பல்வகைத்தது

காந்தநறும் புண்ணைக் கலந்தீ விரும்புமே
வேந்தர் தனமே விரும்புவர் - சாந்தநூல்
கல்லார் பகைசேர் கலகம் விரும்புவர்
நல்லார் விரும்புவர் நட்பு.

## 83. நீத்தார் நுகர்ப்பொருள் நண்ணலாகாது

மற்றைக் குழலார் கவினெல்லாம் ஓர்மகவைப்
பெற்றக் கணமே பிரியுமே - கற்றருளை
வேட்ட பொரியோர் பெருமையெலாம் வேறொன்றைக்
கேட்ட பொழுதே கெடும்.

## 84. தீயொழுக்கம் தீமையே நல்கும்

சீலம் குலம்அடியாள் தீண்டின்கெடும் கணிகை
ஆலிங்கனம் தனநா சமாகும் - நூலிழந்த
வல்லிதழுவக்குறையும் வாழ்நாள் பிறர்தாரம்
புல்லினர்க்கெல் லாநலமும் போம்.

## 85. உண்மையை சிலரே விரும்புவர்

சத்தயம் எக்காலும் சனவிருத்த மாகுமே
எத்தயபொய் யார்க்கும் இதமாகும் - நத்தியபால்
வீடுசென்று விலையாம் மதுயிருந்த
வீடுதனி லேவிலை லயாமே.

## 86. தீயொர் நண்ணிய நல்லோர்க்கும் தீமையே

நல்லொழுக்கம் இல்லார் இடம்சேர்ந்த நல்லோர்க்கும்
நல்லொழுக்க மில்லாச்சொல் நண்ணுமே - கொல்லும்விடப்
பாம்பென வுன்னாரே பழுதையே ஆனாலும்
தூம்பமரும் புற்றடுத்தால் சொல்.

## 87. நல்லோரை அறிய வாக்கு

வாக்குநயத் தாலன்றி கற்றவரை மற்றவரை
ஆக்கைநயத் தால்அறியல் ஆகாதே - காக்கையொடு
நீலச் சிறுகுயிலை நீடுஇசையால் அன்றியே
கோலத்து அறிவருமோ கூறு.

## 88. துயருண்டு இல்லத்தில்

ஆசைஎனும் பாசத்தால் ஆடவர்தம் சிந்தைதனை
வீசுமனையாம் தறியில் வீழ்த்தியே - மாசுபுரி
மாயா மனைவியராம் மாக்கள் மகவென்னும்
நாயால் கடிப்பித்தல் நாடு.

## 89. தானம் மூவகை

தானறிந்தோருக் குதவி தன்னால் அமையும்எனில்
தானுவந்து ஈதல் தலையாமே - ஆனதனால்
சொன்னால் புரிதலிடை சொல்லியும் பன்னாள்மறுத்துப்
பின்னாள் புரிவதுவே பின்.

## 90. மூவகையார் தன்மைகள்

உற்ற மறையகத்தின் உய்க்குமவன் உத்தமனே
மற்றம் மறைபகர்வோன் மத்திமனே - முற்றிழையே
அத்தம் உறலால் புகல்வான் அதமனென
வித்தக நூலோதும் விரித்து.

## 91. மூவகையினர் ஈகைத்தன்மை

உத்தமர்தாம் ஈயுமிடத்து ஓங்குபனை போல்வரே
மத்திமர்தாம் தெங்குதனை மானுவரே - முத்தலரும்
ஆம்கமுகு போல்வர் அதமர் அவர்களே
தேம்கதலியும் போல்வார் தேர்ந்து.

## 92. உயர்ந்தோர் கைம்மாறு கருதார்

எல்லோர் தமக்கும் இனிதுதவல் அன்றியே
நல்லோர் தமக்குதவி நாடாரே - வல்லதரு
நாமநிதி மேகம் நயந்துதவல் அன்றியே
தாமுதவி நாடுமோ சாற்று.

## 93. தீயோர் சொல் மிகவும் வருத்தம்

வெய்யோன் கிரணம் மிகச்சுடுமே வெய்யவனின்
செய்யோன் கிரணம்மிகத் தீதாமே - வெய்யகதிர்
எல்லோன் கிரணத் தெரியினிலும் எண்ணமிலார்
சொல்லே மிகவும் சுடும்.

## 94. இனிய சொல்லே இன்பம் பயக்கும்

திங்கள் அமிர்த கிரணம்மிகச் சீதளமே
திங்களினும் சந்தனமே சீதளமாம் - இங்கிவற்றின்
அன்பறிவு சாந்தம் அருளுடையார் நல்வசனம்
இன்பமிகும் சீதள மாமே.

## 95. நீற்றின் பெருமை

சீராம் வெண்ணீற்றுத் திரிபுண்டரம் விடுத்தே
பேரான முத்தி பெறவிரும்பல் - ஆரமிர்த
சஞ்சீவியை விடுத்தே சாகா திருப்பதற்கு
நஞ்சே புசித்ததுபோன்ம் நாடு.

## 96. அடியார்கள் தியானத்தில் ஆண்டவர்களை எதிர்பார்ப்பர்

செந்தாமரை யிரவி சேருதயம் பார்க்குமே
சந்த்ரோ தயம்பார்க்கும் தண்குமுதம் - கந்தமிகும்
பூவலரப் பார்க்கும் பொறிவண்டு அரனன்பர்
தேவரவைப் பார்ப்பர் தெளிந்து.

## 97. மந்திரங்கள் ஐந்தெழுத்துக்கு ஒப்பாகா

வில்லம் அறுகுக்குஒவ்வா மென்மலர்கள் நால்வரெனும்
நல்லன்பர் சொற்கொவ்வா நான்மறைகள் - மெல்லிநல்லாய்
ஆமந்திரம் எவையும் ஐந்தெழுத்தை ஒவ்வாவே
சோமசுந்த ரற்குஎன்றே சொல்.

## 98. கற்றவர்க்கு நிகரில்லை

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினும்நூல்
வல்லான் ஒருவனையே மானுவரோ - அல்ஆரும்
எண்ணிலா வான்மீன் இலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா ஆகுமோ விளம்பு.

## 99. சேர்ந்த இடத்தின் பயன்

சந்தனத்தைச் சேர்தருவும் தக்கமணம் கமழும்
சந்தனத்தைச் சார்வேய் தழல்பற்ற - அந்தவனம்
தானுமச் சந்தனமும் தன்னினமும் மாள்வதன்றித்
தானும் கெடச்சுடுமோ தான்.

## 100. பெரியோரைச் சேரின் துன்பம் நீங்கும்

கங்கைநதி பாவம் சசிதாபம் கற்பகந்தான்
மங்க லுறும்வறுமை மாற்றுமே - துங்கமிகும்
இக்குணமோர் மூன்றும் பெரியோ ரிடம்சேரில்
அக்கணமே போமென்று அறி.

*****

சிவமயம்

# பாட்டு முதற்குறிப்பு அகராதி

## 1. நீதிநெறி விளக்கம்

பாடல் பக்கம் எண் பாடல் பக்கம் எண்

# 2. முதுமொழிமேல் வைப்பு

## அ



## ஆ



## இ

## 3. நீதிவெண்பா

